# தோழரும் தோழர்தம் பிரானும்





தம்பிரான் தோழர்

# தோழரும்
# தோழர்தம் பிரானும்




சேலம் S. ஜெயலக்ஷ்மி

ஜெயஸ்ரீ அன்ட் கம்பெனி
41, ராமகிருஷ்ண நகர்
சென்னை-28

# பொருளடக்கம்



# பொருளடக்கம்





தோழர்தம் பிரான்

# நூன்முகம்

ஸ்ரீமதி சேலம் S. ஜெயலக்ஷ்மி அவர்கள், சில ஒற்றைத் தாள்களில் தமது கட்டுரை கவிதைகளை, ஆங்கிலத்திலும் தமிழிலும் தனது பொழுதுபோக்கிற்காக, அவற்றை வெளியிடும் கருத்து இன்றி எழுதியவற்றை, ஒரு மூலையில் போட்டு வைத்திருந்தார்கள். சில மாதங்களுக்கு முன்னர் எதையோ நான் தேடிக்கொண்டிருந்த போது மேற்கூறிய காகிதங்கள் என் கைக்குக் கிட்டின. படித்துப்பார்த்தால் கூரிய சீரிய தமிழ்க் கட்டுரைகளாகக் காணப்பெற்றன. இவற்றை இப்படிப் புறக்கணித்தது ஏனோ என்று வருந்தினேன். பிறகு, இவை அச்சுவாகன மேறி வெளியுலகிற்கு வரத்தக்கவை என்று ஜெயலக்ஷ்மி அவர்களை மேலும் ஒன்றிரண்டு கட்டுரைகளை எழுதித்தர வேண்டினேன். உடனே தங்குதடையில்லாத நடையில் எடுத்த எடுப்பிலேயே, அடித்தல் திருத்தல் இன்றி, தெள்ளிய கருத்துக்களைத் தீந்தமிழ்த் தேவாரப் பாடல்களுக்கு விமர்சனமாக எழுதித் தந்தார்கள்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தம்பிரான் தோழர் எனவே இத்துணைக் காலம் நாம் அறிந்து வந்திருக்கிறோம். ஆனால், ஜெயலக்ஷ்மி அவர்கள் சுந்தரரைத் தோழர் என்றும் தியாகராஜப் பெருமானைத் தோழர்தம் பிரான் என்றும் இந்த நூலின் தலைப்பாகக் குறித்துள்ளது பழைய நகைக்குப் புதிய மெருகு ஏற்றியது போலக் காண்கிறது. அருளாளனுக்கே அனைத்து பெருமையும் தரும் வகையில், வேண்டத்தக்கது அறிந்தும் வேண்ட முழுதும் உதவியும்வரும் வீதிவிடங்கப் பெருமானுக்கே யன்றோ வாழ்த்தா யமைகிறது, தம்பிரான் தோழரினும் தோழர்-தம் பிரான் என்ற திருப்பம் !

தொண்டர் நாதனைத் தோழராக்கிக்கொள்ளும் பேறுபெற்ற சுந்தரர் தொண்டர்க்குத் தொண்டனாய்த் தன்னை பாவித்துக்கொண்டு 'தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று தொடங்கித் திருத்தொண்டத்தொகை பாடிய பக்தியையும் பணிவையும் ஆசிரியர், நன்கு குறிப்பிடுகிறார். சுந்தரர் வரலாற்றுப் பகுதியில், குறிப்பிட்ட சில சந்தர்ப்பங்களில் சுந்தரர் திருவுளம் இவ்வாறிருந்திருக்கலாமோ என்று ஜெயலக்ஷ்மி அவர்கள் அனுமானித்து அதனை வினயத்துடன் கூறும் பகுதிகள் படிப்போர் உள்ளத்தில் பக்தி பரிவு உணர்ச்சிகளை உண்டாக்குகின்றன. அடியார்க்கு அடியேன் என்ற கட்டுரையில் தேவாசிரியன் மண்டபத்தில் வீற்றிருந்த சிவனடியார்களைக் கண்டும் அவர்களைத் தொழாமல் கோயிலினுள் சுந்தரர் ஒருவாறு ஒதுங்கிச் சென்று விட்டார் என்று விறன்மிண்டர் வெகுண்டார் என்று புராணம் கூறும்; உண்மையில் சுந்தரர் மிகுதியான தெய்வ உணர்வோடு நாயன்மார்களுக்கு மிகப் பொருத்தமான அடைமொழிகள் கொடுத்துத் திருத்தொண்டத் தொகை அருளிச்செய்திருக்கிறார். முதலில் அவர் ஒருவாறு ஒதுங்கிச் சென்றது அலட்சியத்தால் அல்ல, அவர்களைப்போலல்லாது தான் இல்லறத்தானாக இருக்கிறேனே என்ற கவலையாலிருக்கலாமோ என்று ஆசிரியர் கூறுவது சுந்தரருக்காகத் தாம் வக்காலத்து வாங்கி விறன்மிண்டரிடம் வாதாடுவதுபோல இருக்கிறது.

சுந்தரரின் தமிழையும் இசையையும் ஆசிரியர் 'அன்பதுவாய் அவை அட்டித்தரப் பணியே' என்ற கட்டுரையில் உணர்ச்சி ததும்பப் போற்றுவது பாராட்டற்குரியது. 'எந்தை புகலூர் பாடுமின்' என்ற கட்டுரையில் சுந்தரர் புலவர்களைத் தமராக்கிக்கொண்டு தரும் அறிவுரையை ஆசிரியர் உருக்கமாகப் பேசுகிறார். சுந்தரர் பொன்னுக்குப் பாடினார் அல்லர், அதை வியாஜம

மாகக்கொண்டு இறைவன் அனுக்ரஹத்தை அவ்வப்போது உரிமை கொண்டாடிப் பெற்று மகிழ்ந்தார் என்று ஸ்ரீமதி ஜெயலக்ஷ்மி அவர்கள் 'இவரலாதில்லையோ பிரானூர்' என்ற கட்டுரையில் குறிப்பது நயமாக இருக்கிறது. 'குருகாவூர் வெள்ளடை' என்ற பகுதியில் 'பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து' என்ற மணிவாசகத்தைக் குறிக்கும் ஆசிரியர், குழந்தை அழுதால் தாய் பால் ஊட்டுவாள், அம்மையப்பனே வேண்டத்தக்க தறிந்து வேட்டற்கு முன்பே தந்தருளுவதால் அவன் தாயினும் சாலச் சிறந்தவன் என்று நயம்பட உணர்த்தியிருக்கிறார். மேலும் ஆசிரியர், சுந்தரரின் இறையனுபவம் காலம் இடம் கடந்ததொன்று என்ற உணர்வில் நமக்கும் அது உணர்ச்சியையும் உற்சாகத்தையும், அனுமானிப்பவர்க்கு ஓரளவு அனுபவத்தையும் தரும் என்று கூறுவது திறன்மிக்க கூற்று; சிந்தனைக்குரியது.

நூலின் இறுதியில் சிறந்த சைவ நற்குடியில் தோன்றிய ஜெயலக்ஷ்மி அவர்கள் ''சைவத்திற்கும் முதிர்ந்த பக்தி வழிபாட்டிற்கும் சிறந்த எடுத்துக்காட்டான சுந்தரமூர்த்திகளின் சரிதமும், அவருடைய தேனினும் இனிய பண்சுமந்தத் தேவாரப் பதிகங்களும் தமிழ் மக்களின் விலைமதிப்பற்ற சொத்தாகும்......... தலைமேற்கொண்டு போற்றிக் கொண்டாடவேண்டிய நூல்கள் இவை'' என்று எழுதும்போது படிப்போர் உள்ளம் கரைந்து பக்திச்சுவை சொட்டும் என்பதில் ஐயமில்லை.

ஆசிரியர் இந்நூல் எழுதும் தொண்டின் பயனாக மக்கள் மறந்து கிடக்கும் சில அற்புதத் தேவாரங்களைப் புதுமெருகுடன் நமக்குப் புகட்டுவது மிகவும் வரவேற்கத் தக்க நற்பணியாகும். இவர்களது நன்முயற்சியை முழுவதும் ஆதரித்து தக்க அழகிய படங்களுக்கான

ப்ளாக்குகளையும் தந்துதவிய தருமை ஆதீனக் கயிலைக் குருமகா சன்னிதானம் அவர்களின் பொன்னர் திருவடிகட்கு நாங்கள் என்றென்றும் நன்றி கடப்பாடுடையோம்.

இசைப்பேரரசி ஸ்ரீமதி சேலம் S. ஜெயலக்ஷ்மி அவர்களையும் அவர் பெற்றோரையும் சகோதர சகோதரிகளையும் நேரில் அறிந்தவர்கள் அவர்களது குடும்பமே, திருப்புகழ் குடும்பம் என்று அண்மையில் ஒரு பிரபல சஞ்சிகையில் குறிப்பிட்டிருந்ததை ஆமோதிப்பார்கள். சௌபாக்கியவதி ஜெயலக்ஷ்மி அவர்கள் தெய்வத் தீந்தமிழ்ப் பாடல்களில் மட்டுமன்றி கர்னடக சங்கீதத்திலும் மிக்க இசைப் புகழுடன் விளங்கி வருவது நான் சொல்லத் தேவையில்லை. இசை மேதை மட்டுமன்றி பாடல்களின் கருத்தில் மனம் தோய்ந்து உள்ளத்தை இறைவனிடம் பணித்துக்கொண்டவர் இவர்.

அடிக்கடி அவர் அனுபூதிமான்களின் அருள்வாக்குகளையும் தத்துவக் கருத்துக்களையும் தமிழ், ஆங்கிலம், சம்ஸ்கிருத நூல்களிலிருந்து எனக்குப் படித்துக்காட்டி விளக்கம் செய்து விமர்சனமும் செய்யும்போது என் உள்ளம் தெய்வீக உணர்ச்சி வசப்படும்; அவர்களது எழுத்தும் அத்தகையனவே. அவர்களது தமிழ்த் தொண்டும் தெய்வ பக்தியும் இசைப் புலமையும் மேலும் சிறக்கவும், அவை மொழி இனம் கடந்து உலகம் முழுவதும் பரவிப் பயனளிக்கவும், எந்நாட்டவர்க்கும் இறைவனுகிய தென்னுடைய சிவபரம்பொருள் அருள்பாலிக்கப் பிரார்த்திக்கிறேன்.

சென்னை
21-12-1966

**ச. சிவகுமாரன்**

# மதிப்புரை

நேசம் நிறைந்த உள்ளத்தால் நீலம் நிறைந்த மணிகண்டத்து ஈசனடியார் பெருமையினை உலகறிய எடுத்துரைத்த பேறு சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கே உரியது. தம்பிரான்தோழர் என்ற காரணப்பெயரைப் பெற்ற சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகையை அருளிச்செய்திராவிட்டால் சைவ உலகம் போற்றும் 'பெரியபுராணம்' என்ற சைவத் தனித் தமிழ்க் காப்பியத்தை நாம் காணவே முடியாது. பெரியபுராணம் என்ற திருத்தொண்டர் புராணத்தைப் பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய சேக்கிழார் பெருமான், சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வரலாற்றை அருளிச்செய்த துடன் அமையாது அவரைப் பலவிடங்களில் நெஞ்ச முருகித் துதிக்கின்றார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தில்லையப்பனிடத்திலும், திருவாரூர்ப் பெருமானிடத்திலும் எல்லையில்லாத பேரன்பு பூண்டவர். திருஞான சம்பந்தப் பெருமான் திருவவதாரஞ் செய்த சீர்காழிப் பதியை மிதிக்க அஞ்சினர். பின்பு அவர் திருவாரூருக்குச் சென்றபோது ஆராத பெருங்காதலினல்

" எந்தையிருப்பதும் ஆரூர், அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர் "

என்று பாடிக்கொண்டே சென்றார். திருவாரூர்த் தியாக ராஜப்பெருமான் தனது அடியவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள்பொருட்டு ஓர் எளிய தூதனுகி இருமுறை பரவையிடம் தூது சென்றமையை யார்தான் மறக்க முடியும்?

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் சரித்திரத்திலும், தேவாரத்திலும் மிகவும் ஈடுபாடுடைய சேலம் S. ஜெயலக்ஷ்மி அவர்கள் தாம் யாத்த ''தோழரும் தோழர் தம்பிரானும் என்ற நூலில் சுந்தரர் சரித்திரத்திலுள்ள விசேட பகுதிகளை நல்ல எளிய நடையில் சுவைபட கற்போர் உளங்கொளக்கூடிய முறையில் வரைந்திருக்கிறார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமக்கு வேண்டியவற்றையெல்லாம் இறைவனிடமே வேண்டிப் பெற்றார் என்பதனை ஸ்ரீமதி சேலம் ஜெயலக்ஷ்மி அவர்கள் நயம்பட இந்நூலின்கண் எடுத்துக் காட்டியிருக்கின்றார். இவருடைய நன்முயற்சி பெரிதும் பாராட்டற்பாலது.

வளர்க அவர் சமயப்பணி!

**அருள் தியாகராசா,**
பேச்சுத்துறைத் தலைவர்,
**இலங்கை வானொலி, கொழும்பு**

முகாம் : சென்னை
டிசம்பர் 1966

---

# முன்னுரை

உலகிலே மனித வாழ்க்கையிலே ஏற்படும் அனுபவங்கள் பலதிறப்பட்டன. உடல், உணர்வு, அறிவு இவைகளால் ஏற்படும் இன்பதுன்பங்களைப் போலும் அனுபவங்களையன்றி ஆன்மீக நிலை ஒன்றும் இருக்கின்றது. இந்த ஆன்மீக அனுபவம் நம் நாட்டில் மட்டுமன்றி உலகில் வேறு சமயங்களைச் சார்ந்தவர்களிடத்தும் ஏற்பட்டிருப்பதைக் காணலாம். மாட்டு வண்டியில் மட்டுமே பிரயாணம் செய்யும் வாய்ப்பு பெற்றவனிடம் ஆகாய விமானத்தில் மணிக்குப் பல நூறு மைல்கள் பிரயாணம் செய்யலாம் என்று சொன்னால் அவன் நம்புவது கஷ்டம். அதுபோல் ஆன்மீகவெளிப் பாதையானது ஒரு தனிப்பட்டது.

இன்று ஆகாயத்தையே ஸ்தூல நிலையில் அளந்துவிட்ட அதிசயத்தையும் நாம் காண்கிறோம். இந்த ஸ்தூல சரீரத்தை வைத்துக்கொண்டு நாம் எத்தகைய அற்புதங்களை இவ்வுலகிலே நிகழ்த்தினாலும் இச்சரீரத்தைக் கொண்டுசெல்ல முடியாத, இதற்கு அப்பாற்பட்ட ஆனந்த நிலையை அடையும் ஒரு அனுபவமும் உள்ளது என்பதை ஆன்மீக வாழ்வில் உன்னத நிலையை அடைந்த பெரியார்களின் சரித்திரத்திலிருந்து நாம் அறிகிறோம். விஞ்ஞானரீதியில் உலகம் எவ்வளவு முன்னேற்றமடைந்திருந்தாலும், காணக்கிடைக்காத சுகமும், என்றும் நிலையாயிருக்கக்கூடிய ஆனந்தமும், அழியாத இன்ப நிலையும் இந்த ஆன்மீக வாழ்வில்தான் அடையமுடியுமே தவிர, இவை உலகப் பொருள்களால் கிடைக்காதன.

இவ்வழியை நம்புவதற்கும் அதைப் பின்பற்றுவதற்கும் ஓரளவு அதன் அனுபவத்தை சுவைக்கும் பக்குவம் பெற்றவர்களால்தான் முடியும். நம்பிக்கை அற்றவர்களுக்கு இது பயன்படாது. கீதையில் கிருஷ்ண பகவான் ''என்னிடம் நம்பிக்கையும் பக்தியும் இல்லாதவர்களிடத்திலும் என்னை இகழ்பவரிடத்திலும் என்னைப் பற்றிப் பேசாதே'' என்கிறார்.

इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन ।
नचाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ।।

(அத் 18—67)

அதைப்போல் சுந்தரமூர்த்தி சுவாமிகள் இப்படிச் செய்தாரே, சிவபெருமானே நேரில் வரக்கூடுமா, இது நடந்திருக்குமா என்று சந்தேகிப்பவர்களுக்கு நாம் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை.

ஆனால், உடலும் ஆன்மாவும் ஒன்றுமிடத்து ஏற்படும் அனுபவமாகிய பக்திநிலையிலிருந்து பார்ப்போருக்கு சுந்தரமூர்த்தி சுவாமிகளின் ஒவ்வொரு அனுபவமும் முற்றிலும் மெய்யானது என்றே தோன்றும். அவர் அன்று வாழ்ந்த வாழ்வை நாம் இன்றும் வாழலாம் என்பதால் அல்லவா அவருடைய பக்திச் சுவையில் முதிர்ந்த பாக்கள் இன்றும் ஜீவனுடன் பிரகாசிக்கின்றன. இச்சிறு கூடாகிய உடலின் தளைகளுக்குத் தப்பிச்சென்ற ஆன்மாவிற்குக் காலம் இடம் என்ற வரையறை ஏது? ஆகவே, சுந்தரமூர்த்தி அடிகளின் சொந்த வாக்குகளையே முற்றிலும் உபயோகித்து அவருடைய அனுபவம் எவ்வண்ணம் இருந்திருக்குமோ என்று அனுமானிக்கும் முயற்சியில் இந்நூல் உருவாகி உள்ளது. பேரடியாராகிய சுந்தரரின் அனுபவங்களுக்கு யாரும் ஒரு எல்லைக்கோடு வரைந்து விட முடியாது. இருந்தாலும் முயற்சியே செய்யக்கூடாது

என்பதில்லையே! ஆகவே, பெரியோர்கள் இச்சிறு முயற்சியை அங்கீகரித்து ஆதரவளிப்பார்கள் என்று நம்புகிறேன்.

பல இடங்களில் சுந்தரருக்கு இறைவன் அவருடைய தேவைகளைத் தாமே முன்னுணர்ந்து அவர் கேட்கும் வரை கூடக் காத்திராமல் வலிய வந்து அருளுகிறார். நமது வாழ்க்கையிலும் கூட பல சமயங்களில் நாம் எதிர்பாராத வகையிலே தெய்வாதீனமாக தக்க உதவிகள் வந்து சேருவதைக் காண்கிறோம். ''என்னையே முற்றிலும் சார்ந்திருக்கும் பக்தனுடைய சுகதுக்கங்களை நான் எப்போதும் கண்காணித்து வருகிறேன்'' என்று கீதையில் கிருஷ்ண பகவான் கூறுகிறார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தோழமைத் தன்மை பூண்ட பக்திப் பான்மையைப் பெரிதும் அனுபவித்து மகிழும் பொருட்டு அத்தன்மையையே நிலைக்களனாக வைத்து வேறு மேற்கோள்கள் அதிகம் இராமல் இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. ''உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினால் முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே'' என்ற வாக்கிற்கேற்ப இங்கு தோழமை என்ற உறவு முதன்மையாக நிற்கின்றது. சுந்தரரும் மற்ற உணர்வு களைக்கொண்டு பாடியிருந்தாலும் மிகுதியாக அவர் கைக் கொள்வது தோழமைத் தன்மையையே. இறைவனே அவரைத் தம் தோழரென்று அழைத்தாரல்லவோ! தோழரும் தன்னுடைய பிரானைத், தலைவனை மிகவும் சீரிய முறையில் போற்றி மகிழ்ந்து அவருடைய உயர்ந்த தோழமைக்குத் தாம் எவ்வகையிலும் தகுதி உடையவர் என்பதை நிரூபித்துக் கொண்டார். சைவ நூல்களில் இத்தகைய இறைவனின் தோழராகும் பேற்றை அடைந்தவர் வேறு எவருமில்லை. தம்பிரான் தோழ ராகிய அவர், திருத்தொண்டத் தொகையையும்

இயற்றி மேலும் சிறப்பு பெற்ருர். பெறற்கரிய பெரியாராகிய அடிகளின் வரலாறும் தெய்வீக வாக்குகளான அவருடைய தேவாரப் பதிகங்களும் படிக்கப் படிக்கத் தெவிட்டாதவையாகவும் மேன்மேலும் ஆர்வத்தைப் பெருக்கக் கூடியனவாகவும் உள்ளன.

தேவாரங்களைப்பற்றியும் சைவ நூல்களைப்பற்றியும் சம்பாஷணைகள் ஏற்படும் சமயத்தில் நான் ஏதோ எனக்குத் தோன்றிய சில கருத்துக்களைக் கூற, பைந்தமிழ்ச் செல்வர் என்று தருமையாதீனத்தில் பாராட்டப்பெற்றவரும் எங்கள் குடும்ப ஸ்நேகிதருமாகிய உயர்திரு ச. சிவகுமார் அவர்கள் இக் கருத்துக்களையெல்லாம் தொகுத்து ஒரு நூலாக்கிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டார்கள். அவரைப்போன்ற தமிழில் மிகுந்த தேர்ச்சி பெற்றவர்களும்கூட பாராட்டும் அளவுக்கு என் தமிழ் அறிவு இருக்கக்கூடுமோ என்று எனக்கு வியப்புண்டாயிற்று. எனினும் தோன்றும் கருத்துக்களை அவ்வப்போது எழுத்தில் பொறித்துவைப்பதில் பிழை ஒன்றுமில்லை என்று எண்ணி மேலும் எழுதலானேன். அதன் பயனே "தோழரும் தோழர்தம் பிரானும்" என்ற இப் புத்தகமும் பக்திவனம் என்ற மற்ருெரு புத்தகமும் ஆம்.

புத்தகத்தை இத்தகைய அழகிய வடிவில் ஆக்கிக் கொடுத்த ஹோ அன்ட் கம்பெனியாருக்கும், சிறப்பாக அதன் காரியதரிசி திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைச் செலுத்தவேண்டும்.

இச் சிறு முயற்சியாம் எனது இந்நூலைத் தமிழுலகம் ஏற்று என்னை ஊக்குவிக்கும் என்று நம்புகிறேன்.

சென்னை<br>
21–12–1966

**S. ஜெயலக்ஷ்மி**



இசைப்பேரரசி

திருமதி சேலம் ஜெயலக்ஷ்மி

# 'தம்மானை யறியாத சாதியாருளரே'

எல்லாம் வல்ல இறைவனும் தம் பதவியையும் வல்லமையையும் கண்டு யாவரும் அஞ்சி நடுங்குவதை எண்ணி உள்ளம் தளர்கிறார் போலும்! எம்முடன் நேசத்துடனும் உரிமையோடும் பழகக்கூடிய தோழரும்



" தம்மானை அறியாத சாதியார் உளரே "

உண்டோ என ஏங்கியவராய் அவ்விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ளும் வண்ணம் தமக்குகந்தவாறு தோழமை பூண்டு ஒழுகக் கூடிய ஓர் ஆன்மாவை ஒரே

வழி பூவுலகிற்கு அனுப்பி வைக்கிறார். தம்பிரானுக்கே தோழராகும் பெரும்பேறு பெற்றவர் நாவலூரடிகள். எம்பெருமானுடன் வாதாடியும் உரிமை வழக்குப் பூண்டும் தொண்டர்தம் பெருமையை நிலை நாட்டியவர். அளவுக்கு அதிகமான உரிமையைப் பெற்று அனுபவித்தாலும், அவர் தமக்கு எவ்வண்ணம் அப்பேறு கிடைத்தது என்பதை ஒரு கணமும் மறந்தவரல்லர். இறைவனின் அடியார்க்கெளியனாகும் எளிவந்த தன்மையால் அல்லவோ அவருக்கு இப்பெருமை சீர் சிறப்பு எல்லாம் கிடைத்தன! ஒரு பால் இறைவனின் நட்பைப் பெற்று அளப்பரிய சலுகைகளைப் பெற்றாலும் மற்றோர்பால் அளவற்ற தாழ்மைத்தன்மை பூண்டு திருத் தொண்டர்க்கெல்லாம் தொண்டராக, அடியார்க் கடியாராகத் திகழ்ந்தவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். மிகுதியான கர்வம் உள்ள விடத்தில்தான் மிகுந்த தாழ்மைத்தன்மையும் காணப்படும்; இது உலக இயல்பன்றோ?

இறைவனைப் ''பித்தா! பேயா!'' என்று அழைத்தவர் அப் பித்தன் வேறு யாருமல்லன், தம்மை வலிய வந்து தடுத்தாட் கொள்ளும் பொருட்டுச் சிவபிரானே அவ்வண்ணம் வந்தார் என அறிய ''அத்தா உனக்காளாயினி அல்லேன் எனலாமே'' என்று அவனுக்கே மீளா அடிமையானார்.

திருவெண்ணெய் நல்லூரில் தடுத்தாட் கொண்ட அற்புதம் நிகழ்ந்த பின், சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிதம்பரத்திலே எழுந்தருளியிருக்கின்ற சபாநாயகரான நடராஜப் பெருமானைத் தரிசிக்கும் அவா மேலிட்டவராய்த் தில்லையை நோக்கிப் பயணமானார். பெண்ணை நதியைக் கடந்து திருவதிகையின் எல்லையை அடையும்போது அந்திமாலை நேரமாயிற்று. ''அப்பர் பெருமான் உழவாரப்படையினால் எம்பெருமானின் ஆலயத்திற்கு கைத்

தொண்டு புரிந்த இப் புண்ணியத்தலத்திலே நான் எவ்வாறு அடியிட்டு நடப்பேன்'' என்று அஞ்சி ஊருக்கு வெளியேயிருந்த சித்த வட மடத்திலே போய்த் தங்கியவராய், திருவதிகை வீரட்டானத்தில் எழுந்தருளியுள்ள பெருமானைத் தியானித்துக்கொண்டு நித்திரை போயினர்.

நள்ளிரவில் நித்திரை தடைப்பட, சுவாமிகள் விழித்துப் பார்த்தார். வயோதிகப் பிராமணர் ஒருவர் தம் பாதங்களைச் சுந்தரரின் தலைமீது சுகமாக வைத்துக் கொண்டு படுத்திருந்தார். சுவாமிகள் வெகுண்டு, ''ஏனையா இப்படி என் சிரசை மிதித்துத் தூக்கத்தைக் கலைத்து இடர்ப்படுத்துகிறீர்! சரியான இடம் பார்த்துப் படுத்தால் ஆகாதோ?'' என்று கேட்டார். அம் முதியவர், ''அப்பனே, வயது முதிர்ச்சி காரணமாக இப்படி நேர்ந்துவிட்டது; இருளில் ஒன்றும் தெரியவில்லை'' என்று ஏதோ சமாதானம் கூறினர். சுந்தரரும் அதை ஏற்றுக்கொண்டு வேறுபக்கம் சென்று உறங்கினர். மீண்டும் நடந்ததென்ன! அக்கிழவர் பன்முறை சுந்தரரின் தலைமீது தம் பாதத்தால் மிதித்தார். சுந்தரர் சினம் கொண்டார். பின்னர்க் கிழவர் சமாதானம் கூறினர். வன்தொண்டர் மேலும் சினமுற்றவராய், ''பன்முறையும் என் தலைமீது காலால் மிதித்த நீர் யார்! சொல்லும்'' என்றூர். ''என்னை நீ அறியவில்லையா!'' என்று கூறி அந்தணர் மறைந்தருளினர். தம்மினத்தானை அறிந்து கொண்ட சுவாமிகள் கழிவிரக்கம் கொண்டார். ''வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர் இனத்தகத்தான்'' அல்லனே அவன்?

''என்னே என் பேதைமை! எத்தனை முறைதான் தவறு செய்வேன்! தம்மானை—தன் தலைவனை—அறியாத மூடரும் உண்டோ! என்னைப் போன்ற அறிவிலியும் காணக்கிடைப்

பரோ? தம்மை நான் வந்து காணவில்லையே என்று தாமே வலிய வந்து காட்சி கொடுக்கும் வீரட்டானத்துறை வானை நான் கண்டு கொள்ளவில்லை! தன்னடியை என் முடிமேல் என்று வைத்திடுவான் என்ற ஆசையால் அல்லவோ வாழ்கின்றேன்? ஒரு கணமும் அவனை இகழ்ந்து நான் இங்கு வாழப் போமோ!'' என்னும் உணர்ச்சியுடன் திருப்பதிகம் பாடினர். அதன் முதற் பாசுரம் :

'' தம்மானை யறியாத சாதியா ருளரே !
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைமாவின் உரியானைக் கரிகாட்டிலாடல்
உடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்து
அம்மான்தன் னடிக்கொண்டென் முடிமேல்வைத்
[திடுமென்னும்
ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்
எம்மானை எறிகெடில வட வீரட்டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே.''

''முன்னம் ஒரு முறை இப்பிழை செய்தேன்! என் மறதியை நீக்கி முற்பிறப்பினைக் காட்டி ஆண்டருள் செய்தான்! மீண்டும் அப் பிழையே செய்தேனே! ஆனல் சிந்தையால் மறக்கவில்லை! இனம்தான் கண்டுகொள்ளவில்லை! என்றும் உன்னையே புகழ்ந்து உன்னை மறவாத சிந்தையால் வாழ்வேன்! ஆயினும் ஒரு கணமும் தெரிந்தோ தெரியாமலோ உன்னை இகழ்வேனுயின் இனித்தரியேன்''. என்று நெஞ்சுருகிப் பாடி நம்மையும் நைவிக்கிறுர்.

'' முன்னேஎம் பெருமானை மறந்தென்கொல் மறவா
தொழிந்தென்கொல் மறவாத சிந்தையால் வாழ்வேன்
பொன்னே நன் மணியேவெண் முத்தேசெம் பவளக்
குன்றமே ஈசனென்றுன்னையே புகழ்வேன்

அன்னே என் அத்தா என்று அமரரால் அமரப்
படுவானை அதிகை மாநகருள்வாழ் பவனை
என்னே என் னெறிகெடில வட வீரட் டானத்
துறைவானை இறை போதும் இகழ்வன்போ லியானே.''

தூய நட்பினுல் நிறைந்த உள்ளம், ''விரும்பினேற்கென துள்ளம் விடகிலா விதியே'' என்று ஒரு கணம் பிழைத்ததை எண்ணி எண்ணி வருந்துகிறது. அடியேன் ''தம் மானையறியாத சாதியன்'' ஆயினும், அவன் எனக்கும் எளிவந்து காட்சி தந்தான் எனக் கசிந்துருகுகிருர். இசை ஞானிச் சிறுவனும் நாவலூர் கோனும் வன்றெண்டனும் ஆகிய தான் மதியாது சொன்ன வசையையும் ஏற்று யாவர்க்கும் தன்னை அறிய வைத்த அத்தனை, ஐயனை, பெருமானை, வீரட்டானத்தானை நன்றி பெருக மீண்டும் மீண்டும் வாழ்த்திப் போற்றி மகிழ்கின்றுர்.

———

# 'மற்ருெரு துணை இனி-
# மறுமைக்கும் காணேன்'

தில்லைப் பதியை அடைந்து சபாநாயகரைத் தரிசித்துத் திருப்பதிகம் பாடித் துதித்து மகிழ்ந்த சுந்தர மூர்த்தி சுவாமிகள் அப்போது இறைவன் திருவருளினலே ''நீ திருவாரூரிலே நம்மிடத்துக்கு வா'' என்று ஆகாயத்தில் அசரீரி எழுந்ததைக் கேட்டார். ''என்னப்பன் என்னையாளும் வண்ணமும் இதுவோ'' என்று புளக முற்றுக் கனகசபையைச் சுற்றி வலம் வந்தார்; தில்லைக் கூத்தனிடம் விடைபெற்றுப் பின் கோபுரத்தை வணங்கித் திருவீதி தொழுது தெற்கு வாயிலைக் கடந்தார்; அத்தலத்தின் எல்லையை வணங்கிக் கொள்ளிடக்கரையை அடைந்தார். பின்னர் அத் திருநதியாகிய கொள்ளிடத்தைக் கடந்து சீர்காழியைச் சமீபித்தார்.

உமையம்மையிடம் ஞானப்பாலுண்ட திருஞானசம்பந்தக் குழவி அவதரித்த இடமன்ருே அச் சீர்காழிப் பதி! தொண்டர் தம் தொண்டராகிய சுந்தரர் அப் பதியை எங்ஙனம் காலால் மிதிப்பார்? தம்பிரான் தோழராயிருந்தும் அடியார்களுக்கு அவர் பணியும் தன்மைதான் என்னே? தாழ்மையெனும் தன்மையை இங்ஙனம் பூண்டு ஒழுகும் சீலத்தாலேயே அவர் மேன்மேலும் பெருமை அடைகிருர்! தம் அடியான், தம் தோழன், தம் அன்பனுகிய இவருடைய பெருமையைச் சிவபெருமான் உலகோர்க்கு உணர்த்தாது இருப்பரோ! மகம்மது மலையிடம் செல்லவில்லையானல் மலை மகம்மதிடம் வருகிறது! தம் அன்பன் தம்மைக் காணுமல் செல்லுவதை எம்பெரு

மான் சகிப்பாரோ? சீர்காழித் தலத்தின் எல்லையிலே தங்கியிருக்கும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு, அப்பதியில் திருக்கோலம் கொண்டு விளங்கும் பிரமபுரத்தீசர் தம் காட்சியைச் செம்மையாகக் காட்டியருளுகிறார். ஆனந்த புளகம் கொண்ட அடிகள் தீந்தமிழ்த் தேவாரப் பதிகங்களை அமுதமழை யெனப் பொழிகிறார்.

சாதலும் பிறத்தலும் எனக்குத் தவிர்த்தான், எனக்கருள் தந்தான் என்தலைவன் என்று போற்றுகிறார். உலகமெல்லாம் நீரில் அமிழ்ந்து போகும் பிரளய காலத்திலே தோணியாக மிதந்து வரும் கழுமலவளநகர் உறையும் பிரானைக் கண்டு கொண்டேனே என்றார்.

"சாதலும் பிறத்தலும் தவிர்த்தென்னை வகுத்துத்
தன்னருள் தந்தஎம் தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கொர் பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்த எம்மானை
ஏதிலென் மனத்துக்கொரு இரும்புண்ட நீரை
எண்வகை ஒருவனை எங்கள் பிரானைக்
காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே."

"இறப்பும் பிறப்பும் தவிர்த்து எனையாண்ட நற்றுணையாகிய எம்பிரானை அன்றி மற்றொரு துணை இனி மறுமைக்கும் காண்பேனோ! மறந்திடுவேனோ என்று வருந்தலுற்றேனே! எனக்கு மறவா வரம் அருளினான். சூழ்ந்திருக்கும் சுற்றத்தைத் துணையெனக் கனவிலும் கருதேன்! துணையென்று நான் தொழும் ஒண்சுடரை வானவரும் அறியாத முத்தியும் ஞானமும் பலப்பல நெறிகளும் காட்டியவனை, என்னை இவ்வண்ணம் கற்பனையுடன் பாடும்படிக் கற்பித்தவனை, என் கடவுளை அடியேன் சீர்காழிப் பதியிலே கண்டு கொண்டேனே என்று பரவுகிறார்:

“மற்றெருரு துணையினி மறுமைக்கும் காணேன்
வருந்தலுற்றேன் மறவா வரம் பெற்றேன்
சுற்றிய சுற்றமும் துணையென்று கருதேன்
துணையென்று நான்தொழப் பட்டஒண் சுடரை
முத்தியும் ஞானமும் வானவர் அறியா
முறை முறை பல பல நெறிகளும் காட்டிக்
கற்பனை கற்பித்த கடவுளை அடியேன்
கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே.”

“ஒரு கால் பிழைத்தேனாயினும் பின் பிறவாமைப் பெருமை பெற்றேன். நான் பெற்றது யார் பெறுகிற்பார்? கருமையான கண்டத்தையுடைய பிரானைக் கண்டு கொள்ளும் பொருட்டுப் பாடுகின்றேன். நெஞ்சுருகிப் பாடும் நான் அவனைச் சென்று கூடவும் வல்லேன். எனக்கு அத்தகைய மனத்திண்மையும் என்னுடைய பக்தியில் நம்பிக்கையும் அவனுடைய அருளில் உறுதியும் உண்டு” என்று பாடும் சுந்தரரின் பதிகத்தைப் பார்ப்போம். எப்பதிகம்தான் பக்தியிலும் இனிமையிலும் குறைந்தது! நினைக்குந்தொறும் சுவைக்குந்தொறும் அதன் ருசி மிகுகின்றது என்பதற்கு ஐயமுண்டோ?

“மழைக்க ரும்பும் மலர்க் கொன்றை யினனை
வளைக்கலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
பிழைத்தொரு கால்இனிப் போய்ப்பிற வாமைப்
பெருமை பெற்றேன் பெற்ற தார்பெறு கிற்பார்!
குழைக்க ருங்கண்ட னைக்கண்டு கொள்வானே
பாடுகின்றேன் சென்று கூடவும் வல்லேன்
கழைக்க ரும்பும் கதலிப் பலசோலைக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே”.

என்னும் இனிய பாசுரத்திலும் இவ்வுண்மையை உணரலாம்.

இப்பதிகத்தின் பாடல்கள் ஒவ்வொன்றும் உள்ளத்தை மிகுதியாக உருகச் செய்யும் தன்மை படைத்துள்ளது. சுந்தரமூர்த்தி அடிகளின் தோழமைத் தன்மை பூண்ட, உரிமையோடு கூடிய, நயந்த பக்தியின் சுவையை - யாவரும் படித்து ஆனந்தமுறுவாராக! எம்பிரான் அருள் பெறுவாராக!

———

# 'எம்மையும் ஆள்வரோ கேளீர்'

கழுமலவளநகர்ப் பிரானைக் கண்டு களித்த நாவலூ ரடிகள் சீர்காழியை விட்டுப் புறப்பட்டுத் திருக் கோலாக்கா முதலிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவாரூருக்கு அருகே வந்தார். இதற்குள்ளே திருவாரூர்ப் பெருமானாகிய வன்மீகநாதர் அவ்வூரில் வாழ்பவர்க்கு, ''நம்முடைய அடியனாகிய நம்பியாரூரன் நாம் அழைக்க வருகின்றான். அவனைத் தக்கபடி எதிர் கொண்டழைப்பீராக!'' என்று கனவில் கூறியருளினார். திருவாரூர்ப் பெருமக்கள் மகிழ்வும் ஆச்சரியமும் அடைந்து அக்கணமே இறைவன் கட்டளைப்படி திருவீதி களை மெழுகிக் கோலமிட்டுத் தோரணங்கள் கட்டி அலங் கரித்து பலவகை வாத்தியங்கள் மங்கள ஒலிகளை எழுப்ப, திருமதில் வாயிற்புறத்துக்கு வந்து வன்றொண்டரை எதிர்கொண்டு வணங்கினர்.

நடந்தவற்றை ஊகித்தவராய்ச் சுந்தரர் ஆனந்தம் மிகவும் கொண்டு எம்பிரானுடன் தமக்குள்ள உறவும் அன்பும் மேலும் இறுகப் பெற்றவராய்ச் சிருங்கார ரசம் தொனிக்கும் முறையில் தன் தோழியை நோக்கித் தலைவி கேட்கும் வண்ணமாக ''எந்தை இருப்பதும் ஆரூர்! அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்!'' என்று பாடியருளு கிறார்.

உருத்திர லோகன் என்று ஒருவன் உள்ளானே! அவன் கரையும் கடலும் மலையும், காலையும் மாலையும் எல்லாம் உரையும் (அடங்கும்) போது விரவி வருவான்! கடலும் மலையும் இடத்தையும், காலையும் மாலையும் காலத்

தையும் குறிக்கும். காலம் இடம் இரண்டையும் வென்றிருப்பவன் இறைவன். அவன் வானவர்க்கும் தானவர்க்கும் மேலானவன், அரசன்! மடமகள் கேள்வன்!

அத்தகைய பேரருளான் உறைவது ஆரூர்! பெரிய மனிதர்களைப் பார்க்கச் சென்றால் ''என்னப்பா! இருக்கிறாரா? பார்க்கலாமா? என்று நண்பராக உரிமை கொண்டாடக் கூடியவர் கேட்டுக்கொண்டு செல்வதில்லையா? உள்ளே தனக்கு நிச்சயம் அனுமதி கிடைக்கும் என்னும் போது தான் அந்த சுவாதீனம்.

''கரையுங் கடலுமலையும்
காலையும் மாலையும் எல்லாம்
உரையில் விரவி வருவான்
ஒருவன் உருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன்
வானவர் தானவர்க்கு எல்லாம்
அரையன் இருப்பதும் ஆரூர்
அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்!''

இதென்ன! எப்போது பார்த்தாலும் உருகிக் குழைந்து கொண்டே யிருப்பது! உணர்ச்சியில், அனுபவத்தில்தான் ஒரு மாற்றம் வேண்டாமா! பக்தியில் மட்டும் நவரசம் இல்லையா! இறைவனைக் கொஞ்சம் மட்டம் தட்டிப் பேசிக் கிண்டல் செய்கிறார்! அவனும் தன்னுடன் அப்படி ஒழுகுவார் இல்லையே என்று தானே ஏங்குகிறான்!

இறைவனைத் தனியன் - ஒருவருமில்லாதவன் என்று நான் ஏளனம் செய்தவனில்லை. அவன் எப்படியிருந்தாலும் அவனை உகப்பது என்று தீர்மானம் பண்ணி விட்டேன். யாரேனும் அவனைப் பற்றி வெகுண்டுரைத்தாலும் அவர்களைக் கடிந்துகொள்வேன். நேரில் நான் ஒன்றும் பேசுவதற்கில்லை! எனக்கு மிகவும் இனியனாகிய

அவன் இருப்பதோ காய்களும் கனிகளும் குலைகுலையாக உடைய சோலைகள் பல இருக்கும் திருவாரூர்! அவன் என்னை ஆள்வனோ என்று கேட்டுச் சொல்லும்!

"தனியன் என்றெள்கி யறியேன்
தம்மைப் பெரிதும் உகப்பன்
முனிபவர் தம்மை முனிவன்
முகம் பல பேசி மொழியேன்
கனிகள் பலவுடைச் சோலைக்
காய்குலை யீன்ற கமுகின்
இனியன் இருப்பதும் ஆரூர்
அவரெம்மையும் ஆள்வரோ கேளீர்!"

நட்பின் பெருமையாலும் ஈசன் தன்னுடன் களித்து மகிழ்வான் என்னும் மனத்திண்மையாலும் அவனைப் பரிகாசம் செய்து பாடினரேனும் - உடனே மனதில், குற்ற மற்ற பேரருளாளனாகிய அவனை நானோ இகழ்ந்துரைப்பது! அவனுடைய குணங்களெங்கே! நான் எங்கே என்று இரங்கி, "இன்னும் பல ஆசைகள் என்னை விட்டபாடில்லை. பேசுவதோ சழக்கன்றி வேறில்லை. மனத்தால் பிழைக்கும் தன்மை உடையேன்! நானோ என்னீசனை ஏளனம் செய்வது" என்று பாடுகின்றார்.

"ஆசை பல அறுக்ககில்லேன்
ஆரையுமன்றி உரைப்பேன்
பேசிற் சழக்கலால் பேசேன்
பிழைப்புடையேன் மனந்தன்னால்
ஓசை பெரிதும் உகப்பேன்
ஒலிகடல் நஞ்சமுதுண்ட
ஈசனிருப்பதும் ஆரூர்
அவரெம்மையும் ஆள்வரோ கேளீர்!"

''எந்தை இருப்பதும் ஆரூர்! அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்'' என்று கடைசிப் பாடலையும் பாடிய வண்ணம் அடிகள் திருக்கோயிலை அடைந்து தேவாசிரிய மண்டபத்தை வணங்கித் திருமூலத்தானத்தை வலம் வந்து திருச்சந்நிதியை அடைந்து வன்மீகநாதரைக் கண் களாரக் கண்டு பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கினர். அச்சமயம் யாவரும் கேட்கும்படி ''நாம் உமக்குத் தோழ ரானோம்! முன்னே நாம் உன்னை விவாக காலத்திலே ஆட் கொண்ட போது பூண்ட மணக்கோலத்தை எப்பொழு தும் கொண்டு பூமிமேல் விளையாடுவாய்!'' என்று தெய் வீக ஒலி ஒன்று எழுந்தது.

சுவாமிகள் இதனைக் கேட்டுத் தாங்கொணு மகிழ்வும் பக்தியும் பெருக, ''ஐயனே! தடுத்தாட் கொண்ட மெய்யனே! இதுவோ எனை ஆளும் வண்ணம்! நாயினே னைப் பொருளாகக் கொண்டு தோழனுக ஏற்பதும் நின் பெருங் கருணை அன்றோ?'' என்று போற்றி வணங்கி அடி யார்களோடும் கூடியிருந்தார். அன்று முதற்கொண்டு அடியார்கள் எல்லோரும் சுந்தரமூர்த்தி நாயனுரைத் ''தம்பிரான் தோழர்'' என்று அழைக்கலாயினர். தோழர் வாழ்க! தோழர்தம் பிரான் வாழ்க!

---

# ‘அடியார்க்கு அடியேன்’

இறைவன் இட்ட ஆணையின்படி சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூரிலே நித்தம் மணக்கோலம் பூண்டு அலங்காரம் மிகப் பொருந்தியவராய் வன்மீகநாதரை நாளும் தரிசித்து வணங்கி மகிழ்ந்திருந்தார்.



"இவர்க்கு யான் அடியானாகப் பண்ணு நாள் எந்நாள்"

முற்பிறப்பில் உமாதேவியாரின் சேடியாகத் திருக்கைலாய மலையிலே தொண்டு புரிந்திருந்த கமலினி என்பார் திருவருள் ஆணையால் திருவாரூரிலே உருத்திர கணிகையர்

குலத்திலே பிறந்து பரவையார் என்னும் பெயர் பெற்றிருந்தார். மங்கைப் பருவம் அடைந்த பரவை யார் ஆரூர் இறைவனிடம் மாறாத பக்தி பூண்டு தினமும் சேடிகளோடு, சுவாமி தரிசனம் செய்து வருவாராயினர்.

ஒருநாள் கோயிலில் நாயனாரும் பரவையாரும் எதிர் பாராமலே சந்திக்க நேரிட்டது. இருவருக்கு மிடையே தம்மையறியாது அன்பு பிறந்தது. யாவும் மன்றிலாடி யின் கூத்தே யன்றோ? அவன் ஆட்டிப் படைக்கும் சூத் திரப் பாவைகள் தாமே நாம் அனைவரும்! இந்த அன் பைத் தூண்டி வளர்த்து உடனே ஊராரைக் கொண்டு அவர்கள் திருமணத்தையும் முடித்து வைத்தான் ஆரூர்ப் பெருமான்!

இங்ஙனம் நம்பியாரூரர் பரவையாரோடு கூடி வாழ்ந் திருக்கும் காலத்தில், ஒருநாள் திருக்கோயிலை அடைந்த போது, முற்றும் துறந்த சிவனடியார்கள் தேவாசிரிய மண்டபத்திலே கூடியிருப்பதைக் கண்டார். தம் நிலை யைக் கண்டு தாமே திகைத்தார்! என்னே ஊழ்வினை! தியாக சீலர்களாக விளங்கும் இத்துறவிகளைப்போல் யானும் துறவுக்கோலம் பூணும் பேறு பெறாமற் போனேனே! மாயையாகிய உலக ஆசைக்கு வயப்பட் டேனே! இறைவனின் தனி அன்பிற்குப் பாத்திரனாயினும் உலகையும் உலக இன்பத்தையும் தூசாக மதித்துத் துற வறம் பூண்ட இவ்வடியார்களுக்கு நான் ஈடாவேனோ! எல்லாவற்றையும் துறந்து உன்னைப் பெற்றேன் என்னும் பெருமை எனக்கு இல்லாமற் செய்தாயே என்று உள்ளூர மறுகினார் போலும்! இப்படிப் பட்ட அடியார்களுக்கு அடியனாகும் பாக்கியத்தையாவது எனக்கு அருளும் பெருமானே என்று எண்ணியவாறு திருக்கோயிலுள் புகுந்தார்.

உள்ளத்தினுள்ளே வீற்றிருக்கும் எம்பிரானுக்கு அவர் எண்ணம் தெரியாதா! ஆதலால் இறைவன் அவருக்குக் காட்சி கொடுத்தருளி அவர் விரும்பிய வரத்தைத் தரும் பொருட்டு, ''நீ நம்முடைய அடியார்களை வணங்கி அவர்கள் மீது பதிகம் பாடுவாயாக'' என்று பணித்தருளினர். அவர்களுடைய வரலாறு எதுவும் அறியாத சுந்தரமூர்த்தி சுவாமிகள் மிகுந்த பக்தியுடன் இறைவனைப் பணிந்து தனக்கு அத் தகுதியையும் வல்லமையையும் தாமே அருளும்படி வேண்டினர். சிவபிரானும் அதற்கு இசைந்து அடியார்களுடைய வழித்தொண்டு அவர்க்குத் தெரியும்படி செய்து, உலகம் உய்யும் வண்ணம் வேத சிவாகமங்களை அருளிச் செய்த தமது திருவாக்கினலே, ''தில்லைவாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்'' என்று அடியெடுத்துக் கொடுத்து மறைந்தருளினர்.

தம்மைப்போல் அந்தணர்மரபைச் சார்ந்த தில்லை மூவாயிரரும் கூட இல்லறத்தவர்களே என்பதைச் சுந்தரரின் மனதைத் தேற்றும் வண்ணம் இறைவன் இங்ஙனம் திருவாய் மலர்ந்தருளினர் போலும்! மனிதர்கள் தத்தம் பூர்வ கர்மங்களுக்கு ஏற்றவாறு பிறவியடைகின்றனர்; அதற்கேற்ற சூழ்நிலையில் வைக்கப்படுகின்றனர். இல்லறத்தாராயினும் ஆன்மீகப் பேறு மிகப் பெற்றவராகச் சிலர் இருக்கவும், துறவுக்கோலம் பூண்டும் ஆன்மீக விஷயத்தில் பக்குவம் அற்றவர்களாய் சிலர் இருக்கவும் நாம் காணவில்லையா? உண்மையிலேயே மாபெரும் யோகியாகவும் ராஜரிஷியாகவும் திகழ்ந்த சுந்தரர் இத்தகைய கூற்றுக்கு ஒரு பெரும் சான்றல்லவா!

இங்ஙனம் இறைவனல் திருத்தொண்டத் தொகைக்கு அடியெடுத்துக் கொடுக்கப்பட்ட சுவாமிகள் மீண்டும் தேவாசிரிய மண்டபத்தை அடைந்து அடியார் திருக்கூட்டத்தைப் பன்முறையும் வணங்கி அறுபத்துமூன்று

தனியடியார்கட்கும் அதுவன்றி தொகையடியார்க்கும் தனித்தனியே தம்மை அடியேனென்று கூறி யாவராலும் பெறற்கரிய மாண்பைப் பெற்ருர். சிதாகாசமாகிய தில்லையில் வாழும் பேறும், அகில உலகங்களையும் ஆட்டிப் படைக்கும் தில்லைக்கூத்தனை பூசிக்கும் பேற்றையும் அடைந்து வாழும் பெருமை சான்ற தில்லைவாழந்தணர் தம் அடியார்க்கு அடியேன் என்று தொடங்கி, திருநீல கண்டகுயவனுர், இயற்பகை, இளையான் தன் குடிமாறன் இப்படியாக ஒவ்வொரு அடியாருடைய பெருமைகளைத் தமது தெய்வீகத் திருவருள் வாக்கினுல் பாடிக்கொண்டு வருகிருர் சுவாமிகள். கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க்கடியேனெனவும், செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன் என்றும் பாடுகிருர். திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரையன்தன் அடியார்க்கும் அடியேன் என்றும் வம்பரு வரிவண்டு மண நாற மலரு மதுமலர் நற்கொன்றையா னடியலாற் பேணு எம்பிரான் சம்பந்தர் அடியார்க்கும் அடியேன் என்றும் தமக்கு முற்பட்ட இருபெரும் தேவார ஆசிரியர்களையும் போற்றுகிருர்.

"தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்!
திருநீல கண்டத்துக் குயவனுர்க்கு அடியேன்!
இல்லையே என்னுத இயற்பகைக்கும் அடியேன்!
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்!
வெல்லுமா மிகவல்ல மெய்ப் பொருளுக்கு அடியேன்!
விரிபொழில் சூழ் குன்றையார் விறன்மிண்டற்கு
[அடியேன்!
அல்லி மென் முல்லை யந்தாரமர் நீதிக்கு அடியேன்.
ஆருரன் ஆரூரில் அம்மானுக் காளே."

அடியெடுத்துக் கொடுத்தவனும் தனக்கு உயிரினும் இனியவனுமாகிய ஆரூர்ப்பிரானை ஒவ்வொரு பாட்டினிறுதியிலும் போற்றி மகிழ்கிருர்.

தனித்தனியே அறுபத்து மூவரையும் பாடிய அடிகள் பொதுவாகப் பத்தர்கள் யாவர்க்கும் வணக்கம் தெரிவிக்கிறார். பத்தராய் இறைவனைப் பணிவார்க்கு நான் அடியேன்! பரமனையே பாடுவோர்க்கு அடியேன்! சித்தத்தைச் சிவன்பால் வைத்த யோகிகளுக்கு அடியேன்! முப்போதும் திருமேனி தீண்டிப் பூசை முறை வழுவாது ஒழுகும் கர்மயோகிகளுக்கு அடியேன்! முழு நீறு பூசி முற்றும் துறந்த துறவிகளுக்கும் அடியேன்! உலகத்தின் அறிவுக்கும் அனுபவத்திற்கும் எட்டாத எத்தனையோ மகான்கள் கரந்துறைவார்களாக இருப்பார்கள். அவர்களுக்கும் நான் அடியேன்! என்று பாடினார். ''எந்தரோ மஹானு பாவுலு-அந்தரிகி வந்தனமு''. ''உலகில் எத்தனையோ மகான்கள் இருக்கலாம், அவர்கள் அத்தனை பேருக்கும் என் வந்தனம்'' என்று இசைமேதையும் ராம பக்தருமாகிய தியாகராஜ சுவாமிகள் பாடியுள்ளார்.

தெய்வீகத் திருத்தொண்டத் தொகையைச் சிறிது விரிவாக்கி நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதி என்னும் நூல் இயற்றவும், அதைப் பின்பற்றிச் சேக்கிழார் பெருமான் இவ்விரு நூல்களையும் ஆதாரமாகக் கொண்டு பெரிய புராணத்தைப் பெரிதாக விரித்து எழுதும் வண்ணமும் அருள் செய்து, சைவத்துக்கும் சைவ மரபுக்கும், திருத்தொண்டர்களுக்கும் அழியாத் தொண்டு செய்த சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பெருமை உலகெங்கும் விளங்குவதாகுக.

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
 பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
 திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்
 முழு நீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிசார்ந்த அடியார்க்கும் அடியேன்
 ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே !

# ‘அன்பதுவாய் அட்டித்தரப் பணியே’

திருவாரூரிலே சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரவையாரோடு எண்ணற்ற பரிசனங்களுக்கும் அடியார்கட்கும் அமுதூட்டி ஆதரித்து வாழ்ந்து வரும் காலத்திலே, செல்வ



"நீள நினைந்தடியேன் நித்தலும் கைதொழுவேன்"

வேளாளராகிய குண்டையூர்க் கிழார் என்பார், அடிகளுக்குத் தொண்டு செய்து உய்வடையும் பெருநோக்

கோடு நிரந்தரமாக நெல்லும் பருப்பும் பிற பதார்த்தங்களும் பரவையார் வீட்டுக்கு அனுப்பி வந்தார். அப்படி அனுப்பிவரும் நாளிலே மழையின்மையால் வளம் சுருங்க நெல்லும் குறைந்தது. குண்டையூர்க் கிழார், "சுவாமிகளின் வீட்டிற்கு அனுப்ப இன்று நெல் போதாதே!" என்று மனம் மிக வருந்தித் தாமும் உணவு கொள்ளாமல் அன்றிரவு நித்திரை கொண்டார். இரவு, சுந்தரருக்கும் தமக்கும் இடையறுது உள்ள தோழமையை உலகிற்குப் புலப்படுத்திக்கொள்ளும் திருவுள்ளம் கொண்டிருந்த சிவபிரானுர், குண்டையூர்க் கிழாரின் கனவில் தோன்றிச் "சுந்தரனுக்கு அனுப்பும்படி உனக்கு நெல் தந்தோம்" என்று ஆணையிட்டார்.

உடனே துயில் நீங்கிய குண்டையூர்க் கிழார் கண்டதென்ன? குண்டையூர் முழுவதும் நெல் - இல்லை நெல் மலை! பார்த்தவிடமெங்கும் நெல்மணி மலைமலையாகக் குவிந்திருக்கிறது! இதை எப்படித் திருவாரூருக்குக் கொண்டு சேர்ப்பது! மனித முயற்சியால் முடியும் காரியமா இது! குண்டையூர்க் கிழார் தாம் இதுகாறும் ஏதோ பெரிய நன்கொடையாகப் பொருள்கள் கொடுத்து அடிகளாரைக் காப்பாற்றி வந்ததாக எண்ணியதை நினைத்து மனத்திற்குள் வெள்கினுர். இறைவனுடைய தோழரிடமே சென்று இந்நெல்மலையை எடுத்துச் செல்ல வகை செய்ய விண்ணப்பிக்கலாம் என்று திருவாரூரை நோக்கிப் புறப்பட்டார்.

நிகழ்ந்த சம்பவங்களை அறிந்த சுந்தரமூர்த்தி அடிகளும் குண்டையூரை நோக்கி வந்துகொண்டிருந்தார். வழியிலே அவரைச் சந்தித்த கிழார் நாயனுரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "ஐயனே, நெடுங்காலமாகத் தேவரீருக்கு அடியேன் செய்து வந்த திருத்தொண்டுக்கு இன்று முட்டு வந்தது. அது கண்டு சிவபெருமானே நெல்

மலையைத் தந்தருளியிருக்கிறார். ஆனால், அது மனிதரால் எடுத்துச் செல்லக்கூடிய அளவினதன்று. இனி இது என்னால் செய்யக்கூடிய தொண்டன்று'' என்று அஞ்சி விண்ணப்பித்தார். சுவாமிகள் அதிசயம் மிகுந்தவராய்க் குண்டையூர்க் கிழாரோடு அங்கு சென்று பார்க்க நெல் மலை ஆகாயத்தை அளாவியதாய் இருந்தது. இறைவனின் திருவருளை வியந்து இறும்பூதுற்று, ''பரவையார் வீட்டிற்கு இந்நெல்லைக் கொண்டுசெல்ல ஆட்களும் சிவபெருமானே தந்தாலன்றி முடியாது'' என்று நினைந்து அருகே இருந்த திருக்கோளிலி என்னும் தலத்திற்குச் சென்று இறைவனைத் தன்பால் இழுக்கும் தெய்வீகப் பாக்களைப் பாடலானார்.

இறைவன் தேவாரத்திற்குத்தான் இப்படி வயப்பட்டானோ? அல்லது தெய்வத் தமிழுக்குத்தான் இணங்கினானோ! ஈண்டு தெய்வத் தமிழும் தேனினும் இனிய தேவாரப் பாடலும் ஒருங்கே கிடைக்குமிடம்; இத்துடன் இசையும் பண்ணும் சேர்ந்தது; ஏழிசையாய் இசைப்பயனாய் என்றதுபடி இறைவன் இசையும் பாடலும் தென் தமிழும் ஒருங்கே முழங்குமிடத்தில் தோன்றாது வேறெங்கிருப்பான். வாக்கிற் சொன்னது சொன்னபடி நடக்கும் ஆற்றலைப் பெற்றிருந்த சுந்தரர் பல அற்புதங்களை நிகழ்த்தியதில் என்ன அதிசயம் இருக்க முடியும்! இசைப் பயனேயான பெருமான், பழத்தினிற் சுவை போலப் பண்ணிடைத் தமிழ் போல அடியார் நடுவே இயல்பாக வீற்றிருக்கிறான் என்றால் அதில் மிகை என்ன? பண்ணிடை அதாவது இராகத்தினிடை எண்ணற்ற மொழிகள் காணப்பட்டாலும், பண்சுமந்த பாடல்கள் தீந்தமிழாக இருக்குமேயானால் தென்னாடுடைய சிவன் சிறப்பாக ஆங்குள்ளான் என்பது நிச்சயம் அன்றோ! குடமுனியால் உலகோர்க்கு எடுத்துக் கூறப்பட்ட தமிழ் மொழியின் பெருமையே பெருமை! தமிழ் மொழிக்

கென்றே உள்ள ஒரு தனிப் பெருமையை-தெய்வீக சக்தியை சுந்தரர் வாக்கிலும், அவருடைய ஒவ்வொரு சொல்லுக்கும் கட்டுப்பட்டு நடந்த ஆண்டவனுடைய பேரருளிலும் நாம் நன்கு அறிகிறோம்.

நிற்க சரித்திர சம்பவங்களாகிய மேற்கூறிய அற்புதங்களை அறிந்துகொண்டு வந்த நாம் இப்போது சுவாமிகள் பாடியருளிய திருக்கோளிலிப் பதிகத்திற்கு வருகிறோம். இனி அவருக்கும் ஆண்டவனுக்கும் இடையே நேரிடை உறவு. நெல் எடுத்துப் போக ஆள் தரும்படி கேட்க வந்தவர், இங்கு என்னவெல்லாம் கேட்கிறார் சொல்கிறார் என்று பார்ப்போம். புராண வரலாறு, காலம், இடம் ஆகிய விவரங்கள் ஒருபுறம் அவசியமென்றாலும், அடிகளுடைய தெய்வப் பாக்களிடையே வரும்போது நாம் பெறும் இன்பம், மிகுந்த சிரமத்துடன் மலையேறி வந்து முடிவில் மலைச்சிகரத்தில் ஆ ண் ட வ ன் சந்நிதியை அடைந்து அவனை நேரே தரிசிக்கும் அனுபவத்தை ஒத்துள்ளது.

''நீள நினைந்தடியேன் உமை நித்தலும் கை தொழுவேன்'' என்று ஆரம்பிக்கிறார். நீள உம்மை வழிவழி அடிமையாக நினைந்து வந்திருக்கிறேனுக்கும். இ ன் று நேற்றல்ல - என்று நீ அன்று நான் உன் அடிமை அல்லவோ என்று, முதலில் தன் பரம்பரை உரிமையை நிலை நாட்டிக் கொண்டார். பின்னர் அவ்வுரிமை இருக்கிறதே என்று நான் ஏதோ அலட்சியமாக இருந்து விட்டேனா! இல்லை, விடாது நித்தலும் கைதொழுவேன்! ஒரு கணமும் உன்னை மறவாது வழுத்தி வருகின்றேன்! ஆகவே, நீ எனக்குக் கட்டுப்பட்டு இராதிருப்பதற்கு ஏது வழி என்கிறார். வாளன கண் மடவாளாகிய பரவை உன் திருத்தொண்டர்களுக்கு அமுதிடும் திருத்தொண்டில் தடை ஏற்பட்டு வாடி வருந்தாதிருக்கும் பொருட்டுக் குண்டையூரில்

எனக்குக் கிடைத்திருக்கும் நெல்லை எடுத்துச் செல்லும் பணிக்கு ஆட்கள் கொடுத்து அருளவும் என்று பாடுகிறார். "நெல்லுப் பெற்றேன்" என்று அங்கு வேறு யாரோ நெல்லைக் கொடுத்ததுபோல் கூறுகிறார். நரியைப் பரியாக்கிப் பின் பரியை நரியாக்கிய பெருமான் அந்த விவகாரத்தை இங்கு காண்பித்திருந்தால் என்ன செய்வாரோ! இறைவன் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு அளித்த சலுகைகள் மிகவும் பாரபட்சமுடையன என்பதில் அடியார்களுக்கு சந்தேகமிராது!

" நீள நினைந்தடியேன் உமைநித்தலும் கை தொழுவேன்
வாளன கண் மடவாள் அவள் வாடி வருந்தாமே
கோளிலி எம்பெருமான் குண்டை யூர்ச் சில நெல்லுப்
[பெற்றேன்
ஆள்இலை எம்பெருமான் அவை அட்டித் தரப் பணியே ".

"இவன் ஏது, இங்ஙனம் ஒரு பெண்ணின் பொருட்டு நம்மை வந்து அல்லற்படுத்துகிறானே என்று எண்ணுகின்றாயோ! நீயும் உன் உடம்பில் ஒரு பாதியைப் பெண்ணிற்கென்று கொடுத்திருக்கிறாய்! அது இல்லாமல் தலை மீது ஒரு பெண்ணையும் வைத்துக் கொண்டிருக்கிறாய்! (பின்னால் தமக்கும், இரு பெண்களிடையே சிக்கி அல்லற் படும் கதி ஏற்படுவதை அறியாத சுவாமிகள் இங்ஙனம் ஆண்டவனை இங்குப் பரிகசிக்கிறார் போலும்!) பெண்கள் ஒன்றை அடைய வேண்டுமென்று நினைத்துவிட்டால் அதை அடையும்வரை அவர்கள் படும்பாடு உனக்குத் தெரியாதா! உனக்கு இதில் என்னைவிட அதிக அனுபவம் இருக்கிறதே! நீ ஒன்றும் அறியாதவனல்லவே" என்று கூறுகிறார்.

" பாதியோர் பெண்ணை வைத்தாய்; படரும்சடை கங்கை
[வைத்தாய்!
மாதர் நல்லார் வருத்தமது நீயும் அறிதியன்றே!

கோதில் பொழில் புடைசூழ் குண்டையூர்ச்சில நெல்லுப்
[பெற்றேன்
ஆதியே அற்புதனே அவை அட்டித் தரப் பணியே. "

உன்னை எக்காலமும் நினைந்து ஏத்துவதையே என இயல் பாகக் கொண்டுள்ளேன். எனக்கு வேண்டுவதெல்லாம் உனது அன்பே! வேறென்ன வேண்டும் எனக்கு என்று அன்பைப் பற்றிக் கேட்கும்பொழுது நெல்லுப் பெற்ற தையும் ஆள் வேண்டியதையும் மறந்துவிட்டார். அன் பதுவாய் அவை அடியேற்கு அள்ளிக்கொடுக்க வேண்டு மென வேண்டுகிறார். இவ்வற்புதச் செயல்களை உண்மை யென நிலை நாட்டுவதற்கு அகச்சான்றும் வேண்டும் என்று கருதியே இச்சம்பவங்களைப் பாடல்களிற் பொருத் திப் பாடினரோ என்றும் தோன்றுகிறது.

" எம்பெரு மான்உன்னையே நினைந் தேத்துவன் எப்பொழுதும்
வம்ப மருங்குழலாள் ஒரு பாகம் அமர்ந்தவனே
செம்பொனின் மாளிகைசூழ் திருக்கோளிலி எம்பெருமான்
அன்பது வாய்அடியேற்கு அவை அட்டித் தரப் பணியே ".

இவ்வாறு சுவாமிகள் திருக்கோளிலிப் பிரானைத் துதித்து வேண்டவும் அப்போது "இன்றிரவு பொழுதிற் குள் இந் நென்மலையை நமது பூதகணங்கள் திருவாரூரில் பரவை வீடு மட்டுமின்றி ஊரெங்கும் நிறையும்படி கொண்டுவந்து சேர்க்கும்" என்று ஒரு தெய்வீக ஒலி எழுந்தது. அதைக் கேட்டு மகிழ்ந்த சுந்தரர் உடனே திருவாரூர்க்கு மீண்டும் சென்று பரவையாரிடம் நடந் தனவற்றைச் சொல்லி மேலும் இறைவன் திருவருளை எதிர்நோக்கி இருந்தார்.

மறுநாள் காலை, மக்களின் அதிசயமும் மகிழ்ச்சியும் கரை புரண்டோட, திருவாரூர் நெல் மலையினுள் மூழ்கிக் காட்சியளித்தது. பரவையாரின் மாளிகை எங்கும் நெல்!

தெருவெல்லாம் நெற்களஞ்சியம் - பின்னர்ப் பரவை யாரின் விருப்பப்படி அவரவர் வீட்டு எல்லையில் உள்ள நெல்லை அவரவர் அள்ளி எடுத்துக்கொள்ளலாம் என்று பறை அறைவிக்கப்பட்டது. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பக்தியின் பெருமையைப் போற்றியவாறே பரவையாரை வாழ்த்தியவண்ணம், மக்கள் நெற்குவியல்களை வாரி எடுத்துக்கொண்டனர்.

இத்தகைய பேரடியார் அவதரித்த காலத்தில் வாழ்ந்த மக்கள் மிகவும் பாக்கியசாலிகள். அவதார புருடர்களைக் காண்போரும் அவர் பக்கலில் இருக்கும் பேறு கிடைக்கப் பெற்றவர்களும் நற்கதியை அடைவதற்கு ஐயமும் உண்டோ? பரவையாரின் சமுதாய சமதர்மம்தான் என்னே!

---

# 'நானேல் உம்மடி பாடுதல் ஒழியேன்'

சுந்தரமூர்த்தி அடிகள் திருவாரூரிலே வாழ்ந்திருக்கும் நாளிலே நாட்டியத்தான் குடியில் வசித்து வந்த கோட்புலி நாயனுர் என்பார் அடிகளை அணுகித் தம் மூருக்கு அவர் எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டார். சுந்தரர் மகிழ்வுடன் அதற்கு இசைந்து வன்மீகநாதரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு நாட்டியத்தான் குடிக்குப் போந்தருளினுர். முன்னதாகச் சென்று அவர் வரவுக்காக வழிமேல் விழி வைத்து எதிர்பார்த்திருந்த கோட்புலி நாயனுர் மிக்க ஆரவாரத்துடனும் அலங்காரத்துடனும் நல்வரவு செய்து தமது இல்லத்திற்கு அழைத்துச் சென்ருர். அடிகளுக்குத் தக்க விதத்தில் உபசரணை செய்தார். பின்னர் தம் இரு புதல்விகளாகிய சிங்கடியார், வனப்பகையார் என்ற பெண்களை அவர் ஏற்றருள வேண்டுமென விண்ணப்பித்தார். அடிகள் ஊழ்வினையால் முன்னதாகவே பரவையாரோடு இல்லற வாழ்வு கொண்டிருந்தாலும் மனதின் அடித்தளத்திலே மனைவாழ்க்கையில் மகிழ்ந்தடியேன் இருக்கின்றேனே என்று மறுகிக்கொண்டிருக்கிருர். பின்னுல் வேறு மற்ருெரு பந்தமும் ஏற்பட இருக்கிறது! ஆனுல், காட்டுத் தீப் போன்ற பெரு நெருப்பாகிய யோகவாழ்வு வாழும் சுந்தரமூர்த்தி அடிகளுக்கு எந்த உலக பந்தம் தான் ஊறு செய்யவல்லது? ஆகவே, அவர் கோட்புலியின் பெண்களைத் தம் மக்களெனப் பாவித்து அங்கீகரித்து அதை மெய்ப்பிக்கும் வண்ணம் ''சிங்கடியப்பன்'' என்று தம்மைக் கடைசிப் பதிகத்தில் கூறிக்கொள்கிருர்.

பின்னர்த் திருக்கோயிலுக்கு நாட்டியத்தான்குடி நம்பியாகிய பெருமானை வணங்கும்பொருட்டுச் செல்கிறார். நாட்டியத்தான்குடி நம்பியும் இவர் வரவை மிக்க ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார் என்றால் அது மிகையாயிராது. ஏனெனில், தேவாரப் பதிகம் அத்தனை ரசனையோடும் வாதத்தோடும் வன்தொண்டரிடமிருந்து வருகிறது.

"ஏது ஐயா, பாம்புகளை எடுத்து ஆபரணமாக அணிந்து கொண்டால் அதைக் கண்டு அஞ்சி ஒருவரும் அருகே வரமாட்டார்கள் என்று எண்ணினையோ, அது தான் இல்லை—உன் அரவமாகிய அணிகளைக் கண்டு அஞ்சுபவன் நானில்லை. இடுகாட்டில் ஆடிக்கொண்டிருக்கும் நம்மை யார் மதித்து அணுகப் போகிறார்கள் என்று கருதுகிறாயோ! அதையும் நான் இகழவில்லை. நீர் என்னை வழக்கம்போல் பேணி ஆதரிக்கவில்லையா, அதனாலும் நான் உம்மைக் குறைவாக நினைக்கவில்லை. உன் பெருமையை என்றும் உணர்பவனாகவே உள்ளேன். இப்பிறவியில் மட்டுமன்று; இப்பிறவிக்கு அப்பாலும் உன்னை மறவேன். என்னைக் கண்டுகொள்ளாதது போலவும் மனதிற் கருதாதது போலவும் நீர் இருந்தால் நான் அதற்கு ஏமாந்து விட்டுவிடுவேனா என்ன! என்னிடமிருந்து நீ ஒருக்காலும் தப்ப முடியாது! நான் உன்னடி பாடுதலை என்றும் விடேன். ஏனெனில், உண்மை நட்பும் அன்பும் எவ்வித மான பதில் உதவியையும் கருதி எழுவதன்று. ஆகையால், என்னிடமிருந்து - என் அன்பு வலையிலிருந்து - நீர் தப்பித்துக் கொள்ளலாம் என்று மட்டும் கனவிலும் கருதாதீர்" என்கிறார்.

**"பூணுவதோர் அரவம் கண்டஞ்சேன் ;**
**புறங்காட்டாடல் கண்டிகழேன் ;**
**பேணீராகிலும் பெருமையை உணர்வேன் ;**
**பிறவேனாகிலும் மறவேன் ;**

காணீராகிலும் காண்பன் ; என்
மனத்தால் கருதிராகிலும் கருதி,
நானேல் உம்மடி பாடுதல் ஒழியேன்
நாட்டியத்தான் குடி நம்பீ."

என் மனதில் புகுந்து முற்றிலும் அதைக் கவர்ந்து கொண்ட நீர் இன்று பராமுகமாய் இருப்பது போல் பாவனை செய்தால் நான் அஞ்சி விடுவேனே! "அஞ்சாதே— உமக்காட்செய வல்லேன்" என்றும் ''யாதினுக்காசைப் படுகேன் உனையல்லால்'' என்றும் பாடுகிறார்.

'ஐவாயரவும் மதியும் பூண்ட அழகா, அமரர் தலைவா' என்று விளிக்கிறார். ''மனதில் ஒரு குறிக்கோளை, இலட்சியத்தை வைத்துக்கொண்டுதான் உள்ளேன் அடியேன்— உள்ளமுள்ளளவும் அந்த இலக்கை அடையும் முயற்சியைக் கைவிடேன். நான் உய்ந்து போவேன் என்று எண்ணி உம்மடி அடைந்தேன். நீர் அதனை விரும்பா விட்டாலும் நான் உம்மிடம் அன்பு செய்யும் செயலை விடமாட்டேன். உம்மை நினைந்து உருகி நைந்து, அன்பின் முதிர்ச்சியை அடையும்பொருட்டு அன்றே உமக்காட்பட்டேன்?'' என்கிறார். நான் என் இலட்சியத்தை அறிவேன். அதைத் திண்ணமாக அடைந்து தீருவேன். அன்று உமக்காட்பட்டதும் அதற்கென்றே அல்லாது நான் குறிக்கோளின்றி அலைபவன் அல்ல என்றும் வலியுறுத்துகிறார்.

'' ஐவாய் அரவினை மதியுடன் வைத்த
அழகா ! அமரர்கள் தலைவா !
எய்வான் வைத்ததொரு இலக்கினை அணைதர
நினைந்தேன் உள்ள முள்ளளவும்
உய்வான் எண்ணி வந்தும்மடி அடைந்தேன்
உகவீராகிலும் உகப்பன்
நைவான் அன்றுமக்காட்பட்டதடி யேன்
நாட்டியத்தான் குடி நம்பீ."

அடுத்து மற்றொரு பாடலில் ''என்னே இம்மானுட வாழ்க்கை! இதையும் ஒரு பொருளாகக் கருதி மகிழவும் தகுமோ! உண்மையில் இந்த ஆக்கைக்குரிய வாழ்வை எண்ணிடில் கண்கள் நீரைத்தான் சொரியும்! மேலும் இப்பிறவியே இனி வரும் பிறவிகளுக்கும் காரணமாவதால் இப்பிறவி நோயை அறுக்க எம்பெருமான் திருவடியை நினைப்பதல்லால் வேறு கதி ஏது! உலக வாழ்க்கையின் வெளித் தோற்றங்களையும் மாய ஜாலங்களையும் நான் ஒருக்காலும் ஒரு பொருட்டாக எண்ணமாட்டேன். ஆகையினால் சிவபிரான் பிச்சை ஏற்றுத் திரிந்தாலும் அப்பண்பு கண்டு இகழமாட்டேன். ஏனெனில், அவன் சர்வேச்வரனாக இருந்தும் தன் எளிவந்த தன்மையால் அல்லவோ இத்தொழிலைச் செய்கிறான். அதைப்போலவே எருது வாகனத்தை அவன் உபயோகித்தால் அதைக் கண்டும் நான் இகழமாட்டேன். புறத்தோற்றத்தில் இத்தகைய எளிமையைக் கொண்டாலும் உண்மையில் அவன் யார் என்பதை நான் நன்கு அறிந்து, நான் வளம் மிகுந்திருக்கும் நாளிலும் என் தலைவனாகிய அவனை வணங்குதல் ஒழியேன். மறுபிறவியைப் பற்றியும் எனக்கு அக்கறை இல்லை. அவனைத் தவிர்த்து என்னால் வேறு ஒன்றையுமே நினைக்க முடியாது'' என்று சுந்தரர் இறைவனிடம் தமக்குள்ள ஆறாத காதலைத் தெரிவிக்கின்றார். திருவும் மெய்ப்பொருளும் செல்வமும் எனக்குன் சீருடைக் கழல்களே என்று கூறி வேறொருவரை மதியாது உம்மிடமே உரிமை கொண்டேன் என்று மிடுக்குடன் கூறியவராயிற்றே!

**'' கலியேன் மானுட வாழ்க்கை ஒன்றாகக்**
**கருதிடிற் கண்கள் நீர் பில்கும் ;**
**பலி தேர்ந்துண்பதோர் பண்பு கண்டிகழேன் ;**
**பசுவே ஏறினும் பழியேன் !**

வலியே யாகிலும் வணங்குதல் ஒழியேன் ;
மாட்டேன் மறுமையை நினைய
நலியேன் ஒருவரை நான் உனையல்லால்
நாட்டியத் தான் குடி நம்பீ !

தம்மை மிகுந்த அன்புடன் அழைத்து உபசரித்த கோட்புலியாரைக் ''கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற கொள்திறன் கோட்புலி சென்னி'' என்று சிறப்பித்துக் கூறி சுந்தரர் நாட்டியத்தான்குடி நம்பியை வாழ்த்திப் போற்றுதல் அவர்தம் நன்றி மறவாப் பண்பினை நன்கு புலப்படுத்துவதன்றோ?

———

## ‘வந்தாய், போயறியாய்.’

இறைவனது பரிபூரண அருளையும் இடையருத காட்சி இன்பத்தையும் பெற்று அனுபவித்து வந்த சுந்தரமூர்த்தி அடிகள் ஆங்காங்குப் பல அற்புதங்களை நிகழ்த்திக்கொண்டு தலங்கள்தோறும் சென்று எம்பெருமானின் திருக்கோலங்களைக் கண்களாரத் தரிசித்து வாயார அவனது புகழைப் பாடிப் பரவி வரும் காலத்து, நகரங்களிலே சிறந்ததாகிய காஞ்சிமா நகரிலே சிலகாலம் தங்கிக் கோயில்கள்தோறும் சென்று சுவாமி தரிசனம் செய்து வந்தார். ஒருநாள் திருக்காம கோட்டம் சென்றிறைஞ்சி திருக்கச்சி மேற்றளி உறையும் ஐயனைக் கரை காணுக் காதலுடன் பாடி வழி படலானுர்.

“தூண்டா விளக்கனைய உன் நினைவு எப்போதும் என் நெஞ்சில் குடிகொண்டுள்ளது. உன்னையே முன்பும் நினைந் திருந்தேன். என் மனத்துள் வந்து குடியேறினுய்! ஆனுல், மீண்டும் அதை விட்டு நீங்கவில்லை. என் மனதிலே புகுந்திருப்பதால் என் சிந்தையும் நீயாகவே ஆனதில் என்ன வியப்பு! எந்தையே, என் ஐயனே, இப்பெரும் பாக்கியத்தைத் தவிர நான் வேண்டுவதற்கு வேறென்ன உளது! உன்னையன்றி வேறு ஒருவரை நினைக்கவும் எனக்கு அவசியமுண்டோ!” என்கிறுர் சுந்தரர். நாம் எத்தனை எத்தனை அடைமொழிகள் கொடுத்தாலும் அடிகள் தொடுத்திருக்கும் ஒரு சொல்லுக்கு ஈடாகா அவை! திரும்பத் திரும்பத் தேவாரத்தைப் பாடிச் சுவைப் பதைத் தவிர அதை வேறு விதத்தில் அதிகமாகச் சுவைத்து விட முடியாது.

" நொந்தா ஒண்சுடரே நுனையே நினைந்திருந்தேன்
வந்தாய் போயறியாய் மனமே புகுந்து நின்ற
சிந்தாய் எந்தைபிரான் திருமேற்றளி உறையும்
எந்தாய் உன்னையல்லால் இனி ஏத்தமாட்டேனே."

"மேலும், உன்னைத் தோழனுக அடையப்பெற்ற நான் என் நட்பின் உயர்வை உலகிற்குக் காட்டும் வண்ணம் ஏதோ பொன் முதலியவைகளைக் கேட்டிருக்கலாம். நீயும் இல்லை என்னுமல் அருளியிருக்கிருய்! அதற்காகச் சுந்தரன் பொன்னுக்குப் பாடினுன் என்று சொல்லிவிடுதல் தகுமோ? உனக்கு ஆட்பட்ட காரணத்தால் உன் அடியார்க்கும் தொண்டுபட்டேன். அப்படி ஏதாவது கேட்டிருந்தாலும் அது திருத்தொண்டர்களின் திருத்தொண்டின் பொருட்டேயன்ருே! மேலும், உனக்கு அடிமை என்று நான் இருக்க, உன்னையன்றி வேறு யாரிடம் சென்று இரப்பேன். அப்படி இரத்தல் உனக்கன்ருே இழிவு! மேலும் எனக்கு என்று நான் கேட்டதெல்லாம் பிறவாமையே அன்ருே. பிறவாமையைத் தவிர எனக்கென நான் யாதொன்றும் கேட்கவில்லை. பிறவாமையும் பத்திமையும் அடிமையும் தவிர யான் வேண்டுவது வேருென்றில்லை. பிறவாமை கேட்டொழிந்தேன். பிறவாமை வேண்டுமென்று கேட்டேன், அதனுற் பிறவி ஒழிந்தேன்" என்ருர். தான் கேட்டதெல்லாம் இறைவன் அருளாதொழியான் என்பது அவர் துணிபு. இப்பேர்ப்பட்ட அற்புதமான, உன்னதமான பத்திமை பூண்டவருக்கு ஆண்டவன் வெள்ளையானை மட்டுமென்ன, வேறு என்னதான் அருளமாட்டான்! தம் அமுதமயமான வாக்குகளினுல் நம்மைப் புளகமடையச்செய்யும் நாவலூர் அடிகளின் பெருமையை எங்ஙனம் உரைப்போம்! எப்படிப் போற்றுவோம்!

" ஆள்தான் பட்டமையால் அடியார்க்குத் தொண்டுபட்டுக்
கேட்டேன் கேட்பதெல்லாம் பிறவாமை கேட்டொழிந்தேன் ;
சேட்டார் மாளிகைசூழ் திரு மேற்றளி உறையும்
மாட்டே உன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே."

தான் இறைவனுக்கே ஆட்பட்ட தன்மையை அதனுல் அவனிடம் தனக்குள்ள சிறப்பான உரிமைகளை யாண்டும் வலியுறுத்துவதில் முனைந்த சுந்தரர், தாம் இறைவனை மறந்து அசிரத்தையுடன் ஏமாந்திருந்தாலும் இறைவன் தன் ஒப்பற்ற கருணையால் தானுகவே வலிய வந்து ஆட்கொண்டு தன் உள்ளம் புகுந்த அதிசயத்தை அவர் ஒரு போதும் மறக்கவில்லை. வந்து தன்னுள்ளம் புகுந்தவன், மற்ற அழிவுப் பொருள்களைப்போல் விரைவில் நீங்காது ஆங்கேயே நிலைத்துவிட்டதால் "மெய்ப்பொருளே" என்றும் அவனை விளிக்கிறுர். இத்தகைய இறைவனை ஏத்துவதைவிட்டு வேறு யாரைப் போற்றுவேன் என்கிறுர்.

" மோறுந் தோர் ஒருகால் நினையாதிருந்தாலும்
வேறு வந்தென்னுள்ளம் புகவல்ல மெய்ப்பொருளே,
சேறுர் தண்கழனித் திரு மேற்றளி உறையும்
ஏறே உன்னையல்லால் இனி ஏத்த மாட்டேனே."

மேலும் மற்றொரு பாடலில், "இறைவா, வினை வசத்தால் நான் இம்மண்ணுலகிற் பிறந்து இவ்வுடலத்தைத் தாங்க வேண்டியதாயிற்று. தோற்றமுண்டேல் மரணமுண்டு என்ற நியதிக்கேற்ப இந்நிலையற்ற ஆக்கையை என் இருப்பிடமாகக் கொண்டேன். என் தீவினையினுல் நான் இவ்வூனேறி நிற்க, நான் உன்னை நினைந்த காரணத்தால் நீயுமல்லவோ - ஊனேறி இவ்வுடலம் புகுந்து நிற்கின்றுய்! என்னே உன் கருணை! என்னைக் காக்கும்பொருட்டன்றே - உன் அடியவன் என்ற அருளால் அல்லவோ -

நினைக்கும் என் மனத்தைக் கோயிலாக் கொண்டனை! உன்னைக் குளிர்ந்தேத்துவதைத் தவிர யான் செய்யும் கைம்மாறு வேறுமுண்டோ! ஒண்சுடராகிய நீ எனக்குத் தேனும் இன்னமுதமுமாய் நிற்கின்றாய்'' எனக் கூறுகின்றார்.

"நானேல் உன்னடியே நினைந்தேன் நினைதலுமே
ஊனேறி யிவ்வுடலம் புகுந்தாய்என் ஒண்சுடரே,
தேனே, இன்னமுதே, திரு மேற்றளி உறையும்
கோனே உன்னையல்லால் குளிர்ந்தேத்த மாட்டேனே!"

தன் மனம் இறைவனுடைய நிலைத்த திருவடியிலேயே நீங்காது வதிந்திருப்பதை உணர்ந்து பெருமிதமுறும் அடிகள், ''இவ்வுலகிலே நிலைத்த பொருள் நின்னடியே என்று உன் திருவடியையே நினைந்தேன். நினைதலுமே, என் தலைவனுகிய நீ, உன்னையே நான் நினைத்திருக்கும் படி அருளுடன் பணித்தாய். ஏனெனில், உன்னருளின்றி உன் தாளை வணங்க எவராலும் முடியாதே! உன்னை எனக்குக் காட்டிக் கொடுத்த பண்பனுயிற்றே நீ. இப்போது பெற்றதால் என் துன்பமனைத்தும் நீங்கினேன். மகிழ்ந்து உன்னை ஏத்தும் பணியைத் தவிர யான் ஏது வேண்டுவேன்?'' என மேலும் கூறுகின்றார்.

"நிலையா நின்னடியே நினைந்தேன்; நினைதலுமே
தலைவா, நின்னினையப் பணித்தாய், சல மொழிந்தேன்;
சிலையார் மாதில்சூழ் திரு மேற்றளி உறையும்
மலையே, உன்னையல்லால் மகிழ்ந்துஏத்த மாட்டேனே."

இறைவன் தானே வலிய வந்து தமக்குத் தன்னைக் காட்டி நிற்பதையும் திருவடி தீட்சை செய்ததையும் பல்காலும் தனக்கு, உண்டி செல்வம் முதலிய அளித்துக்

காத்ததையும் ஒவ்வொரு முறையும் வலிய வந்தே இவற்றைச் செய்ததையும் இவற்ருல் தமக்குக் கிடைத்த ஒப்பற்ற பெருமையையும் நட்பையும் எண்ணி எண்ணிச் சுந்தரர் விம்மிதமடைகிருர். இறைவனுக்கும் தமக்கு மிடையே ஏற்பட்டுள்ள நிலேத்த தொடர்பையும் இறைவனுடைய பேரருளுக்குத் தாம் முற்றிலும் பாத்திரமானவர் என்ற உண்மையையும் தமது தெய்வீக வாக்குகளால் தெளிவுறச் சொல்லி வலியுறுத்திக் கொள்கிருர்.

---

# 'எந்தை புகலூர் பாடுமின்.'

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூரில் பரவையாரோடு வாழ்ந்து பல அற்புதங்களை இறைவனருளால் நிகழ்த்திக்கொண்டு எம்பெருமானின் கீர்த்தியையும் திருத்தொண்டர்களின் பெருமையையும் நிலைநாட்டிக் கொண்டிருந்தார். அவ்வப்போது மற்றைத் தலங்களுக்கும் பரிவாரங்கள் புடைசூழ எழுந்தருளிச் சிவபிரானுடைய பல்வேறு திருக்கோலங்களையும் கண்டு களித்து உம்மை என்றும் பாடுதல் ஒழியேன் என்று மனமுருகித் தெய்வீகப் பாக்களைப் பாடிப் பக்தியை எங்கும் பரப்பி வந்தார்.

இங்ஙனமிருக்கப் பங்குனி உத்தரத் திருநாள் சமீபித்தது. திருவிழாச் செலவிற்குப் பரவையார் திருத்தொண்டு செய்வதற்குப் பொருள் வேண்டும்; என் செய்வார்! அவருக்குத்தான் வழக்கமாக வட்டியின்றிப் பொன்னை அள்ளிக் கொடுக்கும் கோமான் இருக்கின்றாரே! பின் அவருக்குக் கவலையேது? வன்றொண்டர் தம்முடைய பலம் பொருந்திய பாணமாகிய தேவாரப் பதிகங்களைப் பாடினால் அதற்கு விலையாகச் சிவபிரான் எதைத்தான் கொடுக்கமாட்டார்? தன் தலைவனுடைய இந்தப் பலவீனத்தை அடிகள் நன்கு உணர்ந்து வைத்திருந்தார் போலும்! திருப்புகலூருக்குப் புறப்பட்டார், பாட்டுப் பாடிப் பொன் பெற்று வரும் பொருட்டு! திருப்புகலூர்ப் பெருமானைத் தரிசித்து இந்நோக்கத்துடன் அவனைப் பாடித் துதித்த அடிகள், பின்னர் அருகே உள்ள மடாலயத்திற்குச் செல்லும்பொருட்டுக் கோவிலின் முன்புறத்தை அடைந்தார். அடியார்களோடும் சற்றே ஓய்வு கொள்ளும் பொருட்டு அங்கே உட்கார, அவரையு

மறியாது உறக்கம் வந்தது. அருகே திருப்பணிக்காக வைக்கப்பட்டிருந்த செங்கற்கள் கிடக்க, அவற்றில் சில வற்றை எடுத்துத் தலையணையாக அமைத்து, மேலே உத்த ரீயத்தை விரித்துத் துயிலிலாழ்ந்தார். சிறிது நித்திரைக் குப் பின் விழித்துப் பார்க்கையில் என்னே அதிசயம்! அத்தனைச் செங்கற்களும் பொன்னுக மாறியிருந்தன! அடி களின் மகிழ்ச்சிக்கும் வியப்புக்கும் அளவேது! எம்பெரு மானின் கருணையை எண்ணி உருகினுர்! புலவர்களே! உலகில் பொய்யே உருவான மானிடர்களைச் சார்ந்தும் அவரைப் புகழ்ந்து இச்சகம் பேசியும் வீண் பொழுது போக்குகின்றீர்களே! நீங்கள் எத்தனை புகழ்ந்தாலும் கொடுப்பவனைக் காணுமே இவ்வுலகில்! எந்தை பிரான், புகலூரில் எழுந்தருளியிருக்கும் ஐயனைப் பாடுங்கள்! இம் மையில் சோறும் கூறையும் கிடைக்கும்! இடர்கள் யாவும் கெடும்! இது மட்டும்தானு! சிவலோகத்திலும் உங் களுக்கு இடம் நிச்சயம் உண்டு என்கிறுர்.

தம்மை யேபுகழ்ந்து இச்சை பேசினும்
சார்வினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே யெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள் !
இம்மை யேதரும் சோறும் கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவலோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே !

''அடியவ ரிச்சையில் எவையெவை உற்றன, அவை தரு வித்தருள்'' பெருமான் அவன். ''நரைகள் போந்து மெய்தளர்ந்து மூத்துடல் நடுங்கி நிற்கு மிக்கிழவனை, வரைகள் போல் திரள் தோளனே என்று வாழ்த்தினும் கொடுப்பாரில்லை'' என்றும், ''நலமிலாதானை நல்லனே யென்று நரைத்த மாந்தரையிளையனே, குலமிலாதானைத் குலவனே என்று கூறினும் கொடுப்பாரிலை'' என்றும்,

''வஞ்ச நெஞ்சனை மாசழக்கனைப் பாவியை வழக்கில் லியைப் பஞ்சதுட்டனைச் சாதுவேயென்று பாடினும் கொடுப்பாரிலை'' என்றும், ''புண்ணியன் எந்தை புகலூரைப் பாடுமின். ஐயனும் அவனைப் பாடினுல் புலவீர்காள்! இம்மையிலும் மறுமையிலும் உமக்குப் பெறற்கரிய பேறுகள் கிடைக்கும்! இதில் சற்றும் ஐயம் கொள்ள வேண்டா! அமரருலகில் ஆட்சி செய்யும் புண்ணியம் உங்களுக்கு உண்டு! ஆகவே, எந்தையைப் பாடுங்கள். குற்றம் குறைகள் நிறைந்துள்ள மானுடர்களை அவர்கள் ஈயும் திருணமாத்திரமான பொருளுக்காக விரும்பிப் புகழ்ந்து, பாடாதீர்கள். தலையும் நம் நாவும் தனக்கென்றே படைத்தனனே! கற்றுத் தேர்ந்த புலவீர்காள்! பெரும்பதவி நமக்குக் காத்திருக்க ஒரு சிறு பயனைக் கருதி வழி மாறுதல், முயல் விட்டுக் காக்கைப் பின் போனவாறு அல்லவா'' என்றும் உண்மைகளை மிகவும் தெளிவாகக் கூறுகிருர்.

தம்பிரான் தோழராகிய சுந்தரர் இதுவும் பாட வல்லார். இதற்கு மேல் சென்று இறைவனைக் கூடவும் வல்லார். தம் கருணையால் புலவர்களைத் தமக்கு இணையாகப் பாவித்து, பாட்டுப் பாடிப் பரிசு பெறும் பனுவலோர் வரிசையில் தம்மை வைத்து அவர்களுக்கு அறிவுரை கூறுகிருர். புலவர்களின் பாக்கியமே பாக்கியம்! ''உள்ளத் தனையது உயர்வு'' என்றபடி மாந்தர்தம் எண்ணங்களின் உயர்வுக்குத் தக்க நிலையை அடைகின்றனர். இறைவனை விட்டு இறையும் அகலாது அவனையே பற்றிக் கொண்டு புணை பிடித்துக் கிடக்கும் அடியார்களது பெருமைதான் என்னே! இறைவனும் அங்ஙனமே அவர்களைத் தொடர்ந்து வருவதன்ருே விந்தை! தங்களுடைய பல விதமான அற்புதச் செயல்களால் உலகோர்க்கு இத் தன்மைகளை உணர்த்தி அருளும் மெய்யடியார்களது திருவாக்குகளையும் வரலாறுகளையும் நாளும் படித்து இன்புறுவோமாக! பேரானந்த நிலை பெறுவோமாக!

---

# 'இவரலா தில்லையோ பிரானுர்'

அடியார்கள் இறைவனுக்குத் தொண்டுபட்டுக் கேட்பதெல்லாம் பிறவாமையே. அவனுடனே சதா காலமும் பிரிவுருமல் ஐக்கியமாய் இருக்கவேண்டுமென்பதே அவர்கள் பேரவா. இவ்விதம் அருட்பேறு பெற்றவர்களை இறைவனும் நன்கு அறிவான். அவர்களைப் பலவிதத்திலும் சோதித்து, துன்பங்களைக் கொடுத்து அவற்றின் வாயிலாக அவர்களுடைய அற்புதமான குணங்களையும் தன்னிடம் அவர்கள் கொண்டுள்ள உறுதியான அன்பையும் உலகோர்க்கு உணர்த்துவான்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளிடமோ இறைவன் விளையாடியது மிக மிக அற்புதம். தம்பிரான் தோழருடன் தோழமை பூண்ட எம்பெருமான் தோழமைக்கே எடுத்துக் காட்டாக வன்றே விளங்கினர்? இவ்வரிய நட்பை மிகச் சிறப்பான முறையில் அனுபவித்த சுந்தரமூர்த்தி அடிகள் ஒரு சமயம், ''இவரல்லாமற் போனல் உலகில் தெய்வமே அற்றுப் போயிற்றே?'' என்று வினவுகிறர். ஏனே அப்படிக் கேட்கின்றர்? எல்லாம் பழைய வழக்கு தான். சுந்தரர் பொன் தா என்று கேட்கவும் பெருமானர் பொன்னைக் கொடுக்கத் தாமதம் செய்யவும் இவர் கோபித்துப் பதிகம் பாடவும் இப்படியாகத்தானே நடந்து வந்திருக்கிறது. தமது தோழனுடைய தேனினும் இனிக்கும் பாடல்களைக் கேட்கத் தவித்துக் கிடக்கும் பெருமான் அவர் பொன்னை யாசித்துத் தம்மை நாடி வரும் தருணத்தைக் கைநழுவ விடுவாரோ?

சுந்தரமூர்த்தி அடிகள், திருமழபாடிக்கு எதிர்க் கரையில், ஐயன் ''தோழனே! என்னை மறந்து சென்றயோ?''

என்று அழைக்கவும், தம் தவற்றை உணர்ந்து காவிரியைக் கடந்து மழபாடியுள் மாணிக்கத்தைத் தரிசித்து,

**பொன்னுர் மேனியனே, புலித்தோலை அரைக்கசைத்து**
**மின்னுர் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை அணிந்தவனே**
**மன்னே மாமணியே, மழபாடியுள் மாணிக்கமே,**
**அன்னே, உன்னைஅல்லால் இனியாரை நினைக்கேனே!**

என்று அருமையாகப் பாடித் துதித்தார். பின்னர் அங்கிருந்து புறப்பட்டுத் திருப்பாச்சிலாச்சிராமத்தை அடைந்து சிவபெருமானிடம் பொன்னை விழைந்து வணங்கினுர். இறைவன் ஏனே ஒன்றும் காதில் விழாததுபோல் வாளாவிருந்தார். அடிகள் இந்த அலட்சியத்தைக் கண்டு மனம் பொருது புழுங்கினுர். ஏனெனில், எப்போதும் கேட்டபோதெல்லாம் கொடுப்பதுதானே வழக்கம்? இப்போது மட்டும் மௌனம் சாதித்தால்!

"தலையும் என் நாவும் வஞ்சமற்ற என் நெஞ்சமும் தனக்கென்றே வைத்துக்கொண்டான். தன் திருவடிக்கடிமை என்று என்னையும் உய்த்துக்கொண்டான். நானும் அதற்கு உடன்பட்டுக் கிடக்கின்றேன். இப்படிப்பட்ட அருமையான நட்பின் பெருமையை எடுத்துக் கூறுவது பொன்னைக் காட்டி 'இது பொன் போல' என்று சொல்வது போலப் பொருளையே உவமையாக்கும் கூற்ருகும். ஆகவே நான் யாது உரைப்பேன்! இப்படிப்பட்ட அடிமை இருப்பின் எந்தத் தெய்வம் எதைத்தான் அருளாது! என்னுடைய அன்பிற்கு இவர் கொடுக்கும் பொன் ஈடாகுமா? தான் கொடுக்கும் பொன்னையல்லவா உயர்வாக எண்ணி விட்டார்? ஆனுலும், இவரை வேண்டுமென்று இவ்வண்ணம் செய்தார் என்றும் சொல்ல முடியாது! ஏனெனில், இவர் ஒரு பித்தனைப் போன்றவர்தானே! இன்னதுதான் செய்வார் என்று யாரும் கணக்கிட முடி

யாதே! சித்தம் போக்கு சிவன் போக்கு அல்லவா! இருந்தாலும் தன்னை விட்டால் வேறு யாருமில்லை என்று இப்பித்தர் எண்ணிவிட வேண்டாம்!'' இப்படிச் சுந்தர மூர்த்தி அடிகள் எண்ணினர் போலும்! அவர்களுடைய எண்ணங்களையும் அதன் ஓட்டங்களையும் யாரே முற்றிலும் அறிய முடியும்! ஏதோ ஓரளவுக்கு அவரவர் எண்ணத்தின் பக்குவ நிலைக்கேற்ப அனுமானிக்கலாம், அவ்வளவுதானே!

"வைத்தனன் தனக்கே தலையும் என்னுவும்
நெஞ்சமும் வஞ்சம் ஒன்றின்றி
உய்த்தனன் தனக்கே திருவடிக்கடிமை
உரைத்தக்கால் உவமனே ஒக்கும்;
பைத்த பாம்பார்த்தோர் கோவணத்தோடு
பாச்சிலாச் சிராமத் தெம் பரமர்
பித்தரே ஒத்தோர் நச்சிலராகில்
இவரலா தில்லையோ பிரானுர்!"

மேலும் அடிகள் கூறுவதென்ன! ஒவ்வொரு முறையும் பொன் வேண்டும்போதெல்லாம் உம்மை அன்னையே என்றும் அத்தனே என்றும் துதி செய்ய வேண்டுமோ? உன்னைத்தான் வேண்டிய அளவு தோத்திரம் செய்துள்ளேனே! அதுபோதும் என்று நினைத்தேன். என்னையும் உன்னடியாருள் ஒருவன் என்று மதித்து அவ்வப்போது இப்படிப் பாடுபடுத்தாமல் அருள் செய்தால் என்னவாம்! வேண்டுமென்றே காலம் தாழ்த்துவாயாகில் உன்னையன்றி வேறு தலைவன் இல்லையா?

அன்னையே என்னேன்; அத்தனே என்னேன்;
அடிகளே அமையுமென்றிருந்தேன்;
என்னையும் ஒருவன் உளனென்று கருதி
இறை யிறை திருவருள் காட்டாய்!

அன்னமாம் பொய்கை சூழ்திரு பாச்சிலாச்
சிராமத்துறை அடிகள்
பின்னேயே அடியார்க்கருள் செய்வதாகில்
இவரலா தில்லேயோ பிரானுர்.

சமயம் வரும்போதல்லவா உண்மை வடிவம் தெரியும் என்று ஏசி, ''உற்ற போதல்லாலுறுதியை உணரேன்'' என்று கூறுகிருர். அற்றவர்க்கருள் செய்யும் பாச்சிலாச்சிராமத்தடிகள் பெற்ற போதுகந்து பெருவிடில் இகழில் இவரென்ன தலேவர்? என்கிருர்-இதென்ன கூற்று! இவர் கொடுப்பவராம் - இறைவன் பெற்றுக் கொள்பவராம்! உலகில் மனித இயல்பை ஆழ்ந்து நோக்கின் பெற்றுக்கொள்வோர் கொடுப்பவரைப்போல் பெருமிதம் பேசிக்கொள்வதை மிக மிகக் காணலாம். இறைவன் அன்பால் தன்னுடன் கட்டுண்டு கிடப்பதை நன்கு உணர்ந்த அடிகள் இன்னும் என்னதான் பேச மாட்டார்!

அவர் பேசும் பேச்சை அந்த ஆண்டவன்தான் கேட்டுக்கொள்ள வேண்டும்! ''பலரையும் ஆட்கொள்வர், பரிந்து ஓர் பேச்சிலர்! ஒன்றைத் தரவிலராகில் இவரலா தில்லேயோ பிரானுர்''. எப்போதும் பிறருக்கு ஏதும் செய்ய வேண்டும் என்று நினேப்பவர்களுக்குத்தான் ஏச்சுப் பேச்சு எல்லாம். சுயநலமாகத் தானுண்டு தன் காரியமுண்டு என்று இருப்பவனே யாரும் குறை கூற மாட்டார்கள். அவன் அறியாதவன், அவனுல் ஒன்றும் இயலாது என்று அனுதாபப்படுவார்கள். பிறர் கஷ்டங்களே அறிந்துகொள்ளும் தன்மையுடையோரை ''உனக்கு எல்லாம் தெரிந்திருந்தும் இப்படிச் செய்யலாமா!'' என்பார்கள். இது உலக வழக்கு! பொன் கொடுப்பார் என்ற நம்பிக்கையோடு ஓடி வந்தவருக்கு இப்படி ஒரு ஏமாற்றத்தைக் கொடுத்தால் எப்படி இருக்கும்!

ஒரு பிறவிக்கன்று; ஏழு பிறவிக்கும் அடியேன்-உனக்கு மட்டும் அடிமையல்ல உன் அடியவர்க்கடியனுமானேன். உன்னிடம் எனக்குப் பூரண உரிமை உண்டு. நான் உனக்கு உரியேன். ஆதலால், அவ்வுரிமையால் என்னுள்ளமும் உருகும். அருமையாய்ப் புகழ்ந்தோர்க்கு அருள் செய்யும் வள்ளல், நீ பெருமையாகப் பேசிவிட்டு சிறுமை செய்தால் அது பொருந்துமோ! என்கிறார்.

ஒருமையே அல்லேன் எழுமையும் அடியேன்
அடியவர்க்கடியனும் ஆனேன்!
உரிமையால் உரியேன் உள்ளமும் உருகும்
ஒண்மலர்ச் சேவடி காட்டாய்
அருமையாம் புகழார்க் கருள் செயும்
பாச்சிலாச்சிரா மத்தெம் அடிகள்
பெருமைகள் பேசிச் சிறுமைகள்
செய்யில் இவரலாது இல்லையோ பிரானார்?

இத்தனையும் கூறி இவ்வளவும் பேசிவிட்டேனே என்று நினைக்கிறாயோ! ஏன்! நான் ஏசிவிட்டால்தான் என்ன. அவ்வளவு பொறுக்க முடியாதா உனக்கு! ஏதோ கோபத்தில் ஓரிரண்டு வார்த்தை சொல்வதுதான். அதனால் நான் இத்துணை நாளும் உன்னை வாயாரப் பாடி மனத்தினால் நினைத்தது எல்லாம் இல்லாமற் போய்விடுமா! தலைவனாகிய நீ என் குற்றம் குறைகளைப் பொறுத்து ஆதரிக்க வேண்டும் அல்லவா! பொன்னைக் கேட்கும் அடிகள் அதைக் கேட்கும் வாய்ப்பில் இறைவன் தரிசனத்தையும் யாண்டும் விரும்புகிறார் போலும். ''பிரிந்திறை போதிற் பேர்வதேயாகில்'' இவரென்ன தலைவர். ஆகவே, சுந்தரர் பொன்னுக்குப் பாடினார் என்று சொல்வதைவிட அதைக் காரணமாகக் கொண்டு இறைவனை அடிக்கடி தரிசித்து அளவளாவினார் என்று சொல்வது பொருந்தும். பெரிய மனிதர்களைக் காணப் போகு

மிடத்து ஏதாவது ஒரு காரியத்தை மேற்கொண்டு போக வேண்டும். ''நான் சும்மாத்தான் பேசிக்கிட்டிருக்கலா மென்று வந்தேன்'' என்று அசடு வழியக் கூற முடியுமா! ''நான் என்ன வெட்டி அரட்டை அடித்துக் கொண்டா உட்கார்ந்திருக்கிறேன்'' என்று அப்பிரமுகர் வெகுள மாட்டாரோ!

அதுபோல சுந்தரமூர்த்தியடிகள் இறைவனை ஒரு நோக்கம் கொண்டுதான் காண வேண்டும் என்று எண் ணியவர் போல அடிக்கடி பொன்னைக் கேட்கும் காரண மாக அவரைச் சந்தித்து மகிழ்கிறார் போலும்! இப்பதி கத்தில் வரும் பாடல்கள் யாவும் மிகவும் இனியவை. நேரடியாக அவற்றைப் படித்துச் சுவைப்பதைத் தவிர மேலும் சிறந்த முறையில் விளக்கம் கூறமுடியாது. கடை சிப் பாடலில் அவர் இறைவனுடன் ''பேசின பேச்சை பொறுக்கிலராகில் இவரலாதில்லையோ பிரானார்'' என்று இனிய வாது செய்வதுடன் இக்கட்டுரையை முடிப்போமாக.

ஏசின அல்ல இகழ்ந்தன அல்ல
எம்பெருமானென்று எப்போதும்
பாயின புகழால் பாச்சிலாச் சிராமத்தடிகளை
அடி தொழப் பன்னாள்
வாயினாற் கூறி மனத்தினால் நினைவான்
வளவயல் நாவலாரூரன்
பேசின பேச்சைப் பொறுக்கிலராகில்
இவரலாது இல்லையோ பிரானார்!

---

# 'குருகாவூர் வெள்ளடை'

சுந்தரமூர்த்தி நாயனுர் திருவாரூரிலே சிறிது காலம் பரவையாருடன் வாழ்ந்திருந்து மீண்டும் சிவஸ்தல யாத்திரைசெய்ய விரும்பியவராய்த் திருவாரூரைவிட்டுப் புறப்பட்டார். திருக்கடவூர் மயானம் முதலிய தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு சீர்காழியின் எல்லையை வலங்கொண்டு சம்பந்தமூர்த்தி சுவாமிகளைத் துதித்துத் திருக்குருகாவூர் செல்லும் வழியை மேற்கொண்டார். பிரயாணத்தின் நடுவே சுவாமிகள் பசியும் தாகமும் மேலிட்டவராய் வருந்தலுற்ருர். இறைவன் தன்னையே புகல் என்று இருக்கும் அடியவனைப் பசியால் வாடச் செய்வானு? அடிகள் செல்லும் வழியில் பாதை ஓரத்தில் நிழல்பரப்பும் ஒரு பந்தரை உண்டாக்கித் தண்ணீரும் பொதிசோறும் வைத்துக்கொண்டு பிராமண வேடத்துடன் அடிகளின் வரவை எதிர் நோக்கியிருந்தார். பந்தரைக் கண்ணுற்ற நாயனுர் தன் பரிவாரங்களுடன் அதன் கீழ்ச்சென்று இளைப்பாறியவண்ணம் பஞ்சாக்ஷரத்தை ஓதிக்கொண்டிருந்தார். பிராமணர் அவரைப் பார்த்து ''நீர் மிகவும் பசித்திருக்கின்றீர்! இந்தப் பொதி சோற்றை உண்டு இந்தத் தண்ணீரைக் குடித்து இளைப்பாறும்!'' என்று சொல்லியருளினுர். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் அதற்கிணங்கிப் பொதி சோற்றைப் பெற்றுக்கொண்டு தமது திரளான பரிசனங்களுடன் அமுது செய்து பசிப்பிணி நீங்கினுர். மேன்மேலும் வரும் ஜனங்கள் உண்ணும்படி அப்பொதி எடுக்க எடுக்க குன்றாது அக்ஷயபாத்திரமாகத் துலங்கியது. அத்தனை மக்களும் வயிருர உண்டு நீரருந்திய பின் அடிகள் அந்த பிராமணரை வாயார வாழ்த்திவிட்டுப் பரிசனங்களோடு

இளைப்பாறும் வண்ணம் நித்திரை போயினர். ஐயனும் தன் திருவிளையாட்டு முடிந்ததெனப் பந்தருடன் மறைந்தருளினர்.

விழித்து எழுந்த அடிகள் பிராமணரைக் காணுது திகைப்புற்ருர்; தொடர்ந்து தமக்கு இறைவன் அருள் பாலிக்கும் அற்புதத்தை எண்ணிப் புளகமுற்று ''இத்தனையாமாற்றை யறிந்திலேன்'' என்று திருப்பதிகம் பாடிக் ''குருகாவூர் வெள்ளடை நீயன்றே'' என்று வாழ்த்தினர்.

''உன் அருமையை நான் இன்னும் அறிந்துகொள்ளவில்லையே! எவ்விதத்திலும் தகுதியற்ற என்னிடம் இத்தகைய அன்பைச் செலுத்தும் உன்னை நான் என்று நன்கு உணர்வேனே! பிறரோ உன்னைப் பித்தனென்று பேசுகின்ருர்! முத்தே! மணியே! மாணிக்கமே! குருகாவூரில் எனக்குப் பிரத்தியட்சமாக வெளிப்பட்டுக் காட்சி கொடுத்த உன்னை நான் எங்ஙனம் போற்றுவேன்?''

**'' இத்தனை யாமாற்றை அறிந்திலேன் எம்பெருமான்;**
**பித்தரே என்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்;**
**முத்தனே, மணிதன்னை, மாணிக்க முளைத்தெழுந்த**
**வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.''**

''ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்'' என்று போற்றுகிருர். ''பாடுவார் பசி தீர்ப்பாய் பரவுவார் பிணி களைவாய்'' ''வெப்பொடு பிணியெல்லாம் தவிர்த்தெனை ஆட்கொண்டாய்'' என்று ஆனந்த பரவசமாகிப் பாடுகின்ருர். தன்னையே முற்றிலும் சார்ந்திருக்கும் அடியார்களை இறைவன் எவ்வண்ணம் கண்ணும் கருத்தும் கொண்டு பேணி வருகிருன் என்பதற்கு இச்சம்பவம் ஒரு நல்ல எடுத்துக்காட்டு. ''எனக்கோர் குறைவுண்டோ?'' என்றும் ''பால் நினைந்தூட்டும் தாயி

னும் சாலப் பரிந்து'' என்றும் அடியார்கள் ஆதாரமில்லாமலா பெருமிதம் கொள்கிறார்கள்! பெற்ற தாய் கூடக் குழந்தை அழுதால்தான் பாலூட்டுவாள். தாயினும் சிறந்த தத்துவனாகிய அவன் நாம் கேட்பதற்கு முன் அருளக்கூடியவன் அன்றோ! அவனை எப்படி எப்படி எத்துணை விதம் துதித்தாலும் அன்பர்களின் ஆவல் அடங்குமோ? தெவிட்டாத இந்த அன்புறவை அனுபவித்துப் பேரானந்தக் கடலில் மூழ்கித் திளைத்த இப்பேரடியார்களின் பெருமைதான் என்னே! மானுடராய்ப் பிறப்பதன் பயன் இதுவே என்று மற்றையோர்க்கு உணர்த்தும் பொருட்டன்றோ இவ்வுலகில் வந்து அவதரித்தார்கள்!

தேனினும் இனிய தமிழை இசை வழியே கேட்கும் போது எத்துணை இன்பம் உண்டாகிறது! ''பண்ணிடைத் தமிழையும் பழத்தினிற் சுவையையும் கண்ணிடை மணியையும் ஒத்திருக்கின்றாய். இவ்வுலகில் உன் அடியார்கள் மனத்தின்கண் சற்றும் இடர் வாராது காத்தருளும் அருளாளன் நீ'' என்கிறார்.

''பண்ணிடைத் தமிழொப்பாய்; பழத்தினிற் சுவையொப்பாய்;
கண்ணிடை மணிஒப்பாய்; கடுவிருட் சுடரொப்பாய்;
மண்ணிடை அடியார்கள் மனத்திடர் வாராமே
விண்ணிடை குருகாவூர் வெள்ளடை நீயன்றே?''

''தூய மனமுடைய உன்னடியார்கள் மனத்திடை தோன்றும் கலக்கத்தைத் தீர்க்கும் வள்ளல் நீ. அத்துடன் நில்லாது எமதருமராசனது ஆட்கள் என்னைத் துன்புறுத்தும் பொருட்டு வந்தாலும் அக்காலத்தும் அத்துயர் என்னை அணுகாது நீ காத்தருளல் வேண்டும்.'' என்றும் பிரார்த்திக்கின்றார். ''இவன் மற்றென்னடியான்'' என்று நீ நமனார் தமர்க்குச் சொல்லியருள வேண்டும் என்றும் பிறிதோரிடத்தில் கூறுகிறார். ''இப்

பிறவியிலும் இப்பிறவியை நீத்துச் செல்லும் நிலையிலும் மற்றெல்லாப் பிறவியிலும் அன்றும் இன்றும் என்றும் நான் உன்னையே நம்பியிருக்கிறேன் அல்லவா ?'' என்கிறார்.

''மலக்கில் நின்னடியார்கள் மனத்திடை மால் தீர்ப்பாய்
சலச்சல மிடுக்குடைய தருமனார் தமரென்னைக்
கலக்குவான் வந்தாலும் கடுந்துயர் வாராமே
விலக்குவாய் குருகாவூர் வெள்ளடை நீயன்றே''.

இறைவனால் பன்முறையும் அன்புடன் பேணப்பெற்று அவனுடன் அரிய நட்பு பூண்ட சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வரலாறு ஒப்பற்றது. இப்பெரும் பேறு எல்லோருக்கும் அமைவது ஒன்றன்று. ஆயினும் ''உறவு கோல் நட்டு உணர்வுக் கயிற்றினால் முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே'' என்றபடி நாமும் இறைவனுடன் ஓர் உறவை ஏற்படுத்திக்கொண்டு அவ்வுணர்வு வழியே ஆண்டவனையும் அவனுடைய அருளன்பையும் எண்ணிப் பார்க்கையில் இப்பேரடியார்களின் ஆனந்தத்தை ஓரளவு பெறலாம் என்பதற்கு யாதும் ஐயமில்லை. ஏனெனில் இடம், பொருள், காலம் என்னும் இம்மூன்றையும் கடந்து நிற்கும் இவ்வன்பு சுந்தரர் காலத்திலும் ஒன்று தான் இப்போதும் ஒன்றுதான். காலத்தினால் அதற்கு அழிவில்லை. அணுகுண்டு முதலானவையும் இங்கு ஒன்றும் பாதிக்காது. உண்மையில் பக்தி என்ற இப்பேரன்பு உலகில் நிலவி இருப்பதனாலேயே மானுட சமூகம் இன்னும் அழிந்து படாமல் இருக்கிறது என்று கூறினால் மிகையாகாது. ஆகவே இவ்வன்பின் வழிப்பட்டு உலகை அன்பு மயமாக்க அனைவரும் முயல்வோமாக!

---

## ‘அடியார் உருகாரே’

சுந்தரமூர்த்தி சுவாமிகள் சோழநாட்டுத் தலங்களை வணங்கிக்கொண்டு பின்னர் சிதம்பரம், திருநாவலூர் முதலிய தலங்களின் மார்க்கமாகத் தொண்டைமண்டலத்தில் இருக்கின்ற ஸ்தலங்களைத் தரிசிக்கும் விருப்பம்



"அரந்தை தரும் பசி தீர அருந்துவீர்"

மேலிடத் திருக்கழுக்குன்றத்தை அடைந்து சுவாமி தரிசனம் செய்து திருக்கச்சூரை அடைந்தார். அங்குக் கோயிலிற் சென்று சுவாமியை வணங்கி, அமுது செய்யும்

பொழுதாகியும் பாகம் பண்ணிக்கொடுக்கும் பரிசனங்கள் வாராமையால் மிகுந்த பசி வருத்தத்தோடு மதிற்புறத்திலே தங்கியிருந்தார். அப்போது பிராமணர் ஒருவர் வெற்று ஓடு ஒன்றை ஏந்திக்கொண்டு அங்கே வந்து அவருடைய பசியால் வாடிய முகத்தைக் கண்ணுற்று ''நீர் மிகவும் பசித்திருக்கின்றீர். சிறிதுபொழுது இங்கேயே இரும். நான் சென்று அன்னம் யாசித்துக் கொண்டு வருகிறேன்'' என்று கூறித் திருக்கச்சூரிலே உள்ள வீடுகள்தோறும் சென்று அன்னமும் கறியும் யாசித்துக் கொண்டு வந்து கொடுத்தார். சுந்தரமூர்த்தி அடிகள் அதை உண்டு பசியாறினர். பிராமணர் திடீரென்று மறைந்தருளினர். அதற்குள் தம்மினத்தானைக் கண்டுகொண்ட அடிகள் ''அடியேன் பொருட்டு நீ இவ்வண்ணம் செய்யலாமோ! இது தகுமோ! இப்பகல் வேளையில் உன் திருவடி நோக ஊரெங்கும் சென்று பிச்சை புகின் அடியார் மனம் என்ன பாடு படும் என்று உனக்குத் தெரியாதா! அடியேன் பொருட்டு நீ இன்னும் என்னென்ன திருவிளையாடல் புரிய இருக்கின்றாயோ அறியேனே!'' என்று உள்ளம் கரைந்து உருகினர். இறைவனை நோக்கி நாம் ஓரடி வைத்தால் அவன் நம்மை நோக்கி ஒன்பதடி வருகின்றான் என்னும் கூற்று எவ்வளவு மெய்யானது என்பதை இச்சம்பவம் விளக்குகிறதல்லவா!

''முதுவாயோரி கதற முதுகாட்டெரி கொண்டாடல் முயல்வானே
மதுவார் கொன்றைப் புதுவீ சூடு மலையான் மகள் தன் [மணவாளா
கதுவாய்த் தலையிற் பலி நீ கொள்ளக் கண்டால் அடியார் [கவலாரே
அதுவே யாமாறிதுவோ கச்சூராலக் கோயில் அம்மானே!''

சரி, எம்பெருமான் தகாத காரியம்தான் செய்துவிட்டான்! இனி என்ன செய்வது! அவன் எவ்வண்ணம் சென்

றிருப்பான் என்பதைக் கற்பனை செய்வதில் அடிகள் தம்மை மறக்கிறார். இடையில் அரவமாகிய அணி அசையத் திருவடிகளில் கழலும் சிலம்பும் 'கலீர் கலீர்' என ஒலிக்க உச்சிப் போதாடும் வேளையில் ஐயன் தெருத்தெருவாய் ஊரில் பிச்சை ஏற்றுத் திரிந்தானே! இதைக் காணும் அன்பர்கள் பாகாய் உருக மாட்டார்களோ! என் தலைவனாகிய இவன் மனதில் என்னதான் கொண்டிருக்கிறான் என்பதும் விளங்கவில்லை. இங்ஙனம் வலிய வந்து இச்சிறு தொண்டுகளைச் செய்து என்னை ஏன்தான் சங்கடத்தில் ஆழ்த்துகிறானோ தெரியவில்லை! ஐயனே! உன் கருணையை நினைந்து உருகுவதைத் தவிர எனக்கு ஏழேழ் பிறவிக்கும் வேறோர் கருமமில்லை என்று அடிகள் நைந்து உருகுகிறார்.

"கச்சேரரவொன்றரையில் அசைத்துக் கழலும்
சிலம்பும் கலிக்கப் பலிக்கென்று
உச்சம் போதா வூரூர் திரியக்
கண்டால் அடியார் உருகாரே
இச்சை அறியோம் எங்கள் பெருமானே
ஏழேழ் பிறப்பும் எனை ஆள்வாய்
அச்சமில்லாக் கச்சூர் வடபால்
ஆலக் கோயில் அம்மானே !"

தோழன் என்ற முறையில் நீ எத்தகைய தொண்டு செய்தாலும் நான் உன் பெருமையை மறந்தேனில்லை. "சாலக் கோயிலுள நின் கோயிலவை என் தலைமேற் கொண்டாடி மாலை தீர்ந்தேன்! வினையும் துரந்தேன்" என்கிறார் சுவாமிகள். மேலும், பெருமானின் கரைகாணாக் கருணையை எண்ணி எண்ணி உருகும் வேளையில் "பசியால் நான் வருந்தியதால் அன்றோ பெருமான் பிச்சை ஏற்று வர நேர்ந்தது! உடற் சுகம் அல்லவோ எனக்குப் பெரிதாகிவிட்டது. பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்

என்றவாறு பசி வந்திட என் அறிவை முற்றிலும் இழந்தேனே. ''ஊனைப் பெருக்கி உன்னை நினையாதொழிந்தேன் செடியேன் உணர்விலேன்'' என்று பசிக் கொடுமைக்குத் தாம் ஆட்பட்டதை எண்ணி மனம் நோகிறார்.

எத்தனை சமாதானம் செய்து பார்த்தும் மனம் கேட்கவில்லை. உன்மீது காதலால் பித்தாகி உன் புகழையே களித்துப் பாடி உன்னை நறுமலர்களால் பூசித்து வேண்டுவனவற்றைச் செய்யத் தக்க அடியார்கள் இங்கிருக்க, நீ பிச்சை ஏற்கும் பொருட்டுச் செல்வது மிக அழகாக இருக்கிறது! உன்னுடைய பதவிக்கும் தகைமைக்கும் இது தகாது என்று நீ அறிந்து கொள்ளவில்லையே! எவ்வளவு நினைத்தும் இறைவன் தனக்கெனப் பிச்சை புக முனைந்ததை ஒப்புக்கொள்ள அவரால் முடியவில்லை.

''காதல் செய்து களித்துப் பிதற்றிக்
கடிமாமலரிட்டுனை ஏத்தி
ஆதல் செய்யும் அடியாரிருக்க
ஐயம் கொள்வ தழகிதே!
ஓதக் கண்டேன் உன்னை மறவேன்
உமையாள் கணவா! எனையாள்வாய்
ஆதற்கழனிப்பழனக் கச்சூ
ராலக் கோயிலம்மானே!''

தன் அளப்பரிய அன்பின் காரணமாக வலிய சென்று அடியார்களின் துயர் துடைத்து அல்லல் அகற்றும் ஐயனின் பெருமைதான் என்னே!

தம்மானையறியாத சாதியாருளரே என்றும், மற்றொரு துணை இனி மறுமைக்கும் காணேன் என்றும், அன்பதுவாய் அடியேற்கவை அட்டித்தரப் பணியே என்றும் நானேல் உம்மடிபடுதல் ஒழியேன் என்றும் வந்தாய் போயறியாய் என்றும், எம்மையும் ஆள்வரோ

கேளீர் என்றும், அடியார்க்கடியேன் என்றும், எந்தை புகலூர் பாடுமின் என்றும், இவரலா தில்லையோ பிரானுர் என்றும், குருகாவூர் வெள்ளடை நீயன்றே என்றும், அடியார் உருகாரே, என்றும், இறைவனைப் பலவிதத்திலும் போற்றியும் துதித்தும் வாது செய்தும் வழக்காடியும் வென்ற சுந்தரமூர்த்தி அடிகளோடு இதுகாறும் உறைந்திருந்தோம். இப்பேரடி யாருடைய அற்புதச் சரித்திரத்தையும் வாக்குகளையும் படிக்கும்போது பல இடங்களில் நம்மை மறந்து அடிகளின் உணர்விலே கலந்து ஒன்றிவிடுகிருேம்.

சைவத்துக்கும் முதிர்ந்த பக்திவழிபாட்டிற்கும் சிறந்த எடுத்துக்காட்டான சுந்தரமூர்த்திகளின் சரித மும் அவருடைய தேனினும் இனிய பண்சுமந்தத் தேவா ரப் பதிகங்களும் தமிழ் மக்களின் விலைமதிப்பற்ற சொத் தாகும். சிறப்பாகச் சைவக் குடியில் பிறந்தோரும் பக்தி வழியில் ஈடுபட்ட மற்றையோரும் தலைமேற்கொண்டு போற்றிக் கொண்டாட வேண்டிய நூல்கள் இவை. சுந்தரமூர்த்தி சுவாமிகள் மேலும் வன்மையோடு, துயர் வந்துற்றபோது போராடி வென்ற வரலாறுகளை மற் ருெரு தொகுதிக்கென வைத்து இச்சிறு தொகுதியை இத்துடன் முடிப்போமாக.

தோழர் வாழ்க! தோழர்தம் பிரான் வாழ்க!

---

